# மஞ்சள் ரோஜா



முதலிய கதைகள்



‘சோமு’

பாரி நிலையம்
59, பிராட்வே · சென்னை 1.

முதற் பதிப்பு—நவம்பர், 1954
மூன்றும் பதிப்பு—ஆகஸ்டு, 1963

விலை ரூ. 2-00



மாருதி பிரஸ், 83, பீட்டர்ஸ் ரோடு, சென்னை—14.

சமர்ப்பணம்

மதிப்புக்கு உரிய ராஜாஜிக்கு

# முன்னுரை

மேனுட்டுத் தத்துவ ஞானி ஒருவர் சொன்னூர்: 'உலக வாழ்க்கை என்பது உணர்ச்சி மயமானவருக்கு ஒரு சோக நாடகம்; சிந்திப்பவர்களுக்கோ ஒரு வேடிக்கை!'

உலக வாழ்க்கையைச் சித்தரிக்கும் ஒரு கலைஞன், வாழ்வின் சோகத்தையும் வேடிக்கையையும், உணர்ச்சி சிந்தனை என்ற இரண்டு கோணங்களிலிருந்தும் உணர்த்துகிறுன்! இதயத்தையும் அறிவையும் கொண்டு இந்த முயற்சியைச் செய்கிறுன். இந்தக் காரியத்தில் அவன் எவ்வளவு தூரம் வெற்றி பெறுகிறுனே, அவ்வளவுக்கு அவனுடைய ஓவியத்திலே 'உயிர்' உண்டாகிறது! இதைத்தான் "வாழ்க்கைக்கு இயைந்த கற்பனை!" என்றும், "இயல்பான சித்திரம்!" என்றும் கூறுகிறேம்.

ஆனுல் ஒரு முக்கிய விஷயம்: நம்முடைய தினப்படியான சந்திப்புக்களில் நாம் சகஜமாகக் காணுகிற ஒரு மனிதனைக் கதையிலே சித்தரிக்கும்போது, அவனுடைய குணங்களையும், அவன் செய்கிற பலப்பல செயல்களையும், அவனுடைய எல்லா அலுவல்களையும், முழுவதும் ஒன்றுகூட விட்டு விடாமல் அப்படியே சொல்லிக்கொண்டு போனுல், கதையில் 'ரஸம்' உண்டாவதில்லை. அன்றுடச் செய்திகளைப் படிப்பது போலத்தான் இருக்கும்! ஆகவே, எடுத்துக்கொண்ட பொருளுக்கும், பாத்திரத்துக்கும் ஏற்ப, எந்த சம்பவங்களை எப்படித் தேர்ந்தெடுப்பது, எங்ஙனம் வகைப் படுத்துவது, எந்த முறையிலே பொருத்துவது என்று, ஒரு கதாசிரியன் கற்பனை செய்யவேண்டியது ஏற்படுகிறது. வாழ்க்கையை அப்படியே படம் பிடிப்பதாகச் சொல்லும் ஒரு கலைஞனுங்கூட, இந்த முறையிலே சம்பவங்களைக் கூட்டியும், குறைத்தும், வகைப் படுத்தியும், பொருளை ஆக்கவேண்டியதிருக்

கிறது! இப்படி ஆக்குகிற வண்ணத்திலேதான் அவனுடைய கலை, உருவம் எடுக்கிறது!

**"நாடக வழக்கினும்**
**உலகியல் வழக்கினும்**
**பாடல் சான்ற**
**புலனெறி வழக்கம்"**

என்ற தொல்காப்பியச் சூத்திரத்துக்கு உரை கூறும் இளம்பூரணர், அற்புதமான விதத்தில் ஓர் அரிய கலையுண்மையை உணர்த்துகிறார்:

"நாடக வழக்காவது, சுவைபட வருவன எல்லாம், ஓரிடத்து வந்தனவாகத் தொகுத்துக் கூறுதல்" என்றும், "உலகியல் வழக்காவது, உலகத்தார் ஒழுகலாற்றோடு ஒத்து வருவது" என்றும் இளம்பூரணர் விளக்கம் செய்யும்போது, 'சுவைபட', 'தொகுத்து', 'ஒத்து' என்ற அந்தச் சொற்களின் மூலம், கலைஞனுடைய கற்பனைக்கே பொருள் கூறிவிடுகிறார்!

வாழ்க்கை என்ற ஆழமான கடலில் முங்கி முத்துக் குளிக்கும்போது, அவனவனுடைய இதயப் பாங்கிற்கும் கையின் வலிமைக்கும், அவன் முங்கிய இடத்துக்கும் ஏற்பக் கையிலே அகப்படுகிற பொருள் அமைகிறது! இதுவே ஒரு கதாசிரியனுடைய ஜாதகம்!

'மஞ்சள் ரோஜா' என்ற இந்தத் தொகுப்பில் உள்ள பன்னிரண்டு கதைகளும் 'கல்கி', 'ஆனந்த விகடன்', 'கலை மகள்', 'வசந்தம்' முதலான பத்திரிகைகளில் வெளியானவை. இந்தப் பத்திரிகைகளுக்கும், இவற்றைப் பாராட்டி ஊக்கம் கொடுத்த அன்பர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

பாரி நிலையத்தினர் இந்த வெளியீட்டில் காட்டிய உற்சாகத்துக்கு, என் வந்தனம் உரியது.

**சோமு**

# உள்ளுறை

# மஞ்சள் ரோஜா

"மோகம் என்பது இதுதானோ—இதை
முன்னமே நான் அறியேன்! ஓ!"

என்ற குறவஞ்சிப் பாடலை இதற்கு முன் முத்தையன் எத்தனையோ தடவை மந்தை நாடகத்தில் கேட்டிருக்கிறான். ஏன்? தானே பாடியும் இருக்கிறான். ஆனால், இப்பொழுதுதான் அந்தப் பொல்லாத பாட்டின் உண்மையான பொருள் அவனுக்குப் புலப்பட்டது. "ஹூம்! என்னமாய்ப் பாடியிருக்கிறான் பாட்டு!" என்று தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டான்.

அன்று பூஞ்சோலையிலே தங்கம்மையைக் கண்டு ஆசை கொண்டது முதல், இரண்டு மாதத்துக்கு அந்தப் பாட்டையே அடிக்கடி பாடிக்கொண்டிருந்தான் முத்தையன். மீனாட்சிபுரத்திலிருந்து பூதத்தான்முக்குக்குப் போய், களப சந்தனம், புனுகு, ஜவ்வாது எல்லாம் வாங்கி வரலானான். கஸ்தூரி மஞ்சளைக் கண்டு விட்டாலோ அவனுக்குத் தங்கம்மையின் ஞாபகந்தான் வந்தது!

முத்தையனுக்கு நல்ல தேகக் கட்டு. "கரு கரு" என்று கருமெழுகு போல் இருப்பான். முறுக்கு மீசை, சொருக்குக் கொண்டை. கையிலே நெற்றிமட்டக் கம்பைப் பிடித்துக்கொண்டு ரத வீதியில் நடந்தான் என்றால், பதினெட்டாம் படிக் கருப்பன்கூடத் தலைப் பாகையை அவிழ்த்து ஒரு கும்பிடு போட்டு விட்டுத்தான் மேலே நடப்பான்!

தங்கம்மை—அவள் பறிக்கும் பருவத்திலுள்ள கத்தரிப் பிஞ்சுபோல இருந்தாள். முகம் இளம் மாம்பழம் மாதிரி இருக்கும்! மாதுளந்தோடு போல நிறம்! மயில்—கழுத்துப் புடவையைக் கொசவம் வைத்துக் கட்டிக் கொண்டு எதிரே வந்துவிட்டால்,

"எண்ணம் உரைத்துவிடில்
தங்கமே தங்கம்—பின்னர்
ஏதெனிலும் செய்வமடி
தங்கமே தங்கம்"

என்ற கவியின் வாக்கிற்கு உள்ள பொருளில், ஒரு புதிய வளைவு கொடுக்கத் தோன்றும்!

இந்த இருவருந்தான் பூஞ்சோலையிலே சந்தித்தார்கள். எப்படி? அது ஒரு கதை!

## 2

மேலநத்தம் பண்ணையார் மேகலிங்க முதலியாருக்கும் மீனாட்சிபுரம் பண்ணையார் மெய்யப்ப பிள்ளைக்கும் சண்டை. சண்டைக்குக் காரணம் என்ன என்று கேட்டால், இருவருக்கும் தெரியாது. வேறு ஒருவருக்குமே தெரியாது. தாவர ஜங்கம சொத்துக்களோடு இரண்டு பண்ணையார்களுக்கும் வழிவழியாக வந்துகொண்டிருந்த பிதிரார்ஜிதம் இந்தச் சண்டை!

ஒரு நாள் மேலநத்தம் பண்ணையார் தம்முடைய தோட்டத்துக் காவல்காரி தங்கம்மையைக் கூப்பிட்டுக் கேட்டார்:—

"தங்கம், எதிரி தோட்டத்தில் புதிதாக மஞ்சள் ரோஜாச் செடி முளைத்திருக்குதே, பார்த்தியா?"

"ஆமா ஆண்டே," என்றாள் தங்கம்.

"என்ன ஆமா? அவன் தோட்டத்தில் மட்டும் என்ன மஞ்சள் ரோஜா?" என்று ஒரு அதட்டல் அதட்டினார்.

"ஆண்டே, இப்ப என்ன செய்யணும்?" என்று மிக்க அடக்கத்தோடு தங்கம்மை கேட்டாள்.

"எப்படியும் இன்னும் இரண்டு நாளில் மஞ்சள் ரோஜா நம்முடைய தோட்டத்துக்கு வந்தாக வேண்டும்; இல்லாவிட்டால் என்ன செய்வனோ தெரியாது. ஆமாம்!"

மறு நாள் தங்கம்மை எங்கெல்லாமோ அலைந்து திரிந்து பார்த்தாள். முந்நீர்ப்பள்ளம், மேலநத்தம், கொக்கிரகுளம், வண்ணார்பேட்டை, மூர்த்தீச்வரம், சிந்துபூந்துறை, குறுக்குத்துறை எங்குமே இல்லை மஞ்சள் ரோஜா! மீனாட்சிபுரத்தில் அந்த ஒரு தோட்டத்தில்—எதிரி தோட்டத்தில்தான்—அது இருந்தது!

முதல் நாள் முழுதும் அலைச்சலில் கழிந்துவிட்டது. மறுநாள் முழுதும் ஏக்கத்திலே! மூன்றும் நாள் விடிந்தால் என்ன ஆவது?

'கருங்கும்' என்று அந்தி இருண்டு வருகிற நேரத்தில் தங்கம்மை ஒரு கத்தி எடுத்து முந்தியிலே செருகிக் கொண்டு, ஆற்றைக் கடந்து மேலநத்தத்திலிருந்து மீனாட்சிபுரத்துக்கு நடந்தாள். அக்கரைக்குப் போய் எதிரி தோட்டத்து வேலியின் ஊடாகக் கூர்ந்து பார்த்தாள். உள்ளே மஞ்சள் ரோஜா "கொளு கொளு" என்று பூத்துக் குலுங்கியது!

தோட்டத்துக் காவல்காரன் முத்தையனைத் தங்கம்மைக்குத் தெரியாது. தலையாரி தடிவீரத் தேவனுடைய மகன்தான் முத்தையன் என்று, கேள்விப்

பட்டிருக்கிறாள். அதனாலேயே பயம் அதிகம்! அங்குமிங்கும் கண்களைச் சுற்றிப் பார்த்தாள்; ஆசாமியைக் காணோம்! நெற்றி மட்டக் கம்பு மட்டும் சவுக்கையிலே சாத்தியிருந்தது. ஐந்தரை அடி உயரம் இருக்கும். வெண்கலப் பூண் நிலா வெளிச்சத்தில் 'தள தள' என்று மின்னி மேலே நடக்கவொட்டாமல் அவளைப் பின்னுக்கு இழுத்தது. அதே சமயம் பண்ணையாரை நினைத்தாள்; 'பகீர்' என்றது. சொன்ன வேலையைச் செய்யாமல் சாவதைவிட, செய்துவிட்டுத்தான் சாவோமே என்று எண்ணினாள். விறு விறு என்று தோட்டத்துக்குள்ளே நடந்தாள்.

முந்தியில் இருந்த கத்தியை உருவினாள். கை பதறியது. பதற்றத்தோடு பதற்றமாக, ரோஜாச் செடியை வளைத்து ஒரு நீளமான குச்சியை நறுக்கினாள்.

"யாரது?" என்று ஒரு ஆங்காரமான குரல் கேட்டது! பதினெட்டாம் படிக் கருப்பனே தோட்டத்துக்குள் இறங்கி வந்து குரல் கொடுப்பது போல இருந்தது அது!

"யாரது?"—மீண்டும்!

"ஐயா...சாமி!" என்று பதறிக்கொண்டே தங்கம்மை கீழே விழுந்தாள்.

நினைவு திரும்பியபோது அவள் முத்தையன் மடியில் தலை வைத்துப் படுத்துக்கொண்டிருந்தாள். நிலா வெளிச்சத்தில் கண்ணைத் திறந்து ஒரு தரம் பார்த்துவிட்டு அப்படியே மறுபடியும் இமைகளைப் 'படக்'கென்று மூடினாள்,

"என்னியேக் கண்டா ஒனக்கு அம்புட்டுப் பயமாவா இருக்கு?" என்று கேட்டான் முத்தையன்.

"ஒன்கிட்டே பயமில்லே. அந்த மீசையைப் பார்த்தாத்தான் என் தலே சுத்துது!" என்றாள் தங்கம்.

"ஒனக்காக வேணும்னு நான் இந்த மீசையை எடுத்துரட்டுமா?" என்று முத்தையன் கேட்டான்.

"எனக்காகவா! அம்மாடீ!...அப்படியெல்லாம் செய்யாதே! ஒங்க ஆண்டை கோவிச்சுக்கிடுவாரு!" என்று அவள் சொன்னாள்.

"ஒனக்கு ரோசாக்குச்சி வேணும்னு என்கிட்டே கேக்கக்கூடாதா? பைத்தியக்காரி!" என்று இழுத்தான் முத்தையன்.

"முன்னப் பின்னப் பளகாத ஆம்பிளேகிட்டே நான் எப்படி வெக்கமில்லாமப் பேசுவேனும்!" என்று தங்கம்மை கேட்டாள்.

"அட பைத்தியமே! அக்கரைப் பண்ணேயாருக்கும் இக்கரைப் பண்ணேயாருக்கும் சண்டையின்னு, நம்பளுக்கு என்னட்டி?"—இப்படிச் சொன்னபோது முத்தையன் முகத்தில் நிலா வெளிச்சம் நல்ல பிரகாசமாக விளேயாடியது.

"நான் போறேன். எங்க ஆண்டை கோவிச்சுக்கிடுவாரு" என்று சொல்லிக்கொண்டே கன்றுக் குட்டியைப் போல ஒரு துள்ளுத் துள்ளி ஓடினாள் தங்கம்மை.

"இந்தா இந்தா, ரோசாக்குச்சியை மறந்துட்டியே!" என்று சொல்லிக் கீழே விழுந்து கிடந்த குச்சியை எடுத்து அவள் கையிலே கொண்டு கொடுத்தான் முத்தையன்.

# 3

மன்மதன் மலர் அம்புகளை எய்கிறான் என்று சொல்லுகிறார்கள். அதன் நிஜம் பொய் எப்படியோ தெரியாது. ஆனால் முத்தையன் சம்பந்தப்பட்ட மட்டில், மன்மதன் மெய்யாகவே மலர் அம்புகளைத்தான் எய்தான்! அதிலும் நல்ல ரோஜா மலர் அம்புகள்! பண்ணையார்களுடைய பகை என்ற முள்ளுக்கு நடுவிலே மலர்ந்த மஞ்சள் ரோஜா மலர்கள்!

ஒரு நாள் தங்கம்மையைப் பார்த்து அவன் கேட்டான் :—

"காணும் வள்ளிதனைக்
கந்தனார் கூடியதும்
மாணாள் சுபத்திரையை
வாள்விசயர் மணந்ததுவும்
தாங்களாய்ச் சம்மதித்தோ
தந்தைதாய் சம்மதித்தோ?"

தங்கம்மை நிதானமாகப் பதில் சொன்னாள் : "அதெல்லாம் பாட்டிலே சரி. நம்ம ரெண்டு பேருக்கும் தாயும் தகப்பனாரும் சம்மதிச்சாக்கூடப் போதாது. எங்க பண்ணை ஐயாவும் ஒங்க பண்ணை ஐயாவும் சம்மதிக்கணும்!"

தங்கம்மை சொன்ன அந்த வார்த்தைகளின் உண்மை, இரண்டு மாதம் கழித்துத்தான் அவனுக்குப் புரிந்தது.

ஆமாம்; தங்கம்மை மறந்து விட்டுப் போன ரோஜாக் குச்சியை அவ்வளவு கவனமாக ஞாபகப்படுத்தி அவளிடம் கொடுத்தபோது, முத்தையனுக்கு எவ்

மான வல்லூறு! அதற்கு நாக்கில் நரம்பு கிடையாது! ஆனால் சம்பந்தப்பட்ட ஒரு மனித மனம் அப்படி யிருக்குமா? எந்த நிமிஷம் முத்தையன் காணாமல் போனானோ அதிலிருந்து தங்கம்மைக்கு உலகமே முள்ளும் செடியும் அடர்ந்த ஒரு நெருஞ்சில் காடாக இருந்தது. பூஞ் சோலைக்குள்ளே பூத்திருந்த மெல்லிய மலர்கள் எல்லாம் அவளுடைய கண்களைக் குத்தின!

ஓடிப் போன முத்தையன் முன்னதாகத் தன்னிடம் ஒரு வார்த்தை சொல்லியிருந்தால் தானும் அவனோடு புறப்பட்டிருக்கலாமே என்று நினைத்தாள் தங்கம்மை. ஆனால் தன்னால் அல்லவா இத்தனை துன்பமும் நேர்ந்தது என்று நினைத்து அவன் தன்னையே வெறுத்து உதறி யிருந்தால்—? அந்த எண்ணத்தை அவளால் தாங்க முடியவில்லை!

மீனாட்சிபுரம் கிராமமும், மேலநத்தம் கிராமமும், என்றும்போல் உதிப்பதும், வெயில் காய்வதும், அஸ்த மிப்பதுமாக, அலட்சிய பாவனையில் நாட்களைக் கழித்துக் கொண்டிருந்தன! மனிதர்கள் வழக்கமான தங்கள் அலுவல்களிலே, உறங்கி விழித்து உலாவிக் கொண்டிருந் தார்கள்! முத்தையனைப்பற்றி யாருக்கு என்ன கவலை?

கிராமங்கள் அவனை மறந்தன! தோட்டங்கள் அவனை மறந்தன. அவன் கையால் நட்டு வளர்த்த செடி கொடிகளுங்கூட அவனை மறந்துவிட்டனவா? இருக்கலாம். ஆனால் தங்கம்மை? அவளுக்கு ஓர் உள்ளம் இருந்தது; அந்த உள்ளத்திலே அவன் இருந்தான்! எனவே...

கல்யாண மாதங்கள் ஒவ்வொன்றாக வந்து வட்டம் சுற்றின! ஆற்றுக்கு அக்கரையிலும் இக்கரையிலுமாக

இரண்டு கிராமங்களிலும், வாலிபர்கள் கன்னியரைக் காதலித்தார்கள். திருமணங்கள் நடந்தன. மேளம் முழங்கியது. ஊர்வலம் வந்தது. வயதான பெண்டுகள் தம்பதிகளை வாழ்த்தினார்கள். கிழவர்கள் தாம்பூலத்தைப் போட்டவாறு மகிழ்ச்சியை மென்று சுவைத்துக் கொண்டே பட்டணப் பிரவேசம் வந்தார்கள்! ஆனால் தங்கம்மை?

தங்கம்மையின் தாயும் தகப்பனும் எவ்வளவோ சொல்லிப் பார்த்தார்கள். பண்ணையார் எத்தனையோ சொன்னார். அவள் அசையவில்லை. காலையில் எழுந்தது முதல், இரவு இருட்டுகிற வரை, அவள் இந்தத் தோட்டத்தில் களை எடுப்பதும், மண்ணைக் கொத்திக் கொடுப்பதும், பதியங்கள் போடுவதும், தண்ணீர் இறைப்பதுமாகத் தனது நாட்களைக் கழித்தாள்.

ஆரம்பத்தில் நெருஞ்சில் காடாக இருந்த தோட்டம் இப்பொழுது, பிரிவிலே ஆறுதல் தருகிற மலர் மெத்தையாக இருந்தது அவளுக்கு! சில இரவுகளில் நீண்ட நேரத்துக்குப் பிறகு, உறக்கம் வராமல் அவள் தோட்டத்துக்குள்ளே சென்று, அந்த மஞ்சள் ரோஜாச் செடிக்கு அருகிலே நிற்பாள். நிலா வெளிச்சத்தில் முத்தையன் கொடுத்த ரோஜா, தழைத்துப் பூத்துக் குலுங்குவதை இமை கொட்டாமல் பார்த்துக்கொண்டே இருப்பாள்! அந்த மலர்கள் சிரிப்பது போலவும், ஏதேதோ தன்னிடம் பேசுவது போலவும் எல்லாம் அவளுக்குத் தோன்றும்!

ஐந்து வருஷங்கள் இப்படி ஓடியபோதுதான் மீனாட்சிபுரம் பண்ணையார் மெய்யப்ப பிள்ளை, அவருக்கு நேர்ந்திருந்த வியாதிக்கு 'வேண்டும் அவிழ்தம் கொடுத்தும் குணத்துக்கு வராமல்' சிவலோக பதவி அடைந்தார். அவ்வளவு பெரிய சொத்துக்கு யாதொரு

வாரிசும் இல்லாமல் அந்த மகானுபாவர் இந்த உலகத்தை விட்டுப் பிரிந்தார்!

மரணத்திற்குச் சில நாளைக்கு முன்புதான் அநேகருக்கு எண்ணங்கள் உதிக்கும் என்று சொல்வதுண்டு. அப்படித்தானே என்னவோ, அவர் முத்தையனைப் பற்றி எங்கெல்லாமோ விசாரணை செய்து தெரிந்து, ஒரு கடிதம் எழுதினார்:—

'சிரஞ்சீவி முத்தையாவுக்கு,

ஆசீர்வாதம். நீ கொழும்பில் வீரப்ப செட்டியாரிடம் வேலை பார்த்து வருவதாக இங்கு தேவகோட்டைக் கணக்குப் பிள்ளை மூலம் தாக்கல் அறிந்தேன். நான் இவ்விடம் மரணப் படுக்கையில் இருக்கிறேன். வாரிசில்லாத என்னுடைய சொத்து சுதந்திரங்களுக்கு தாயாதிகள் இருக்கிறார்கள். வயல் வரப்புகளுக்கு அவர்கள் தண்ணீர் பாய்ச்சுவார்கள். ஆனால் பூந்தோட்டத்தை யார் கவனிக்கப் போகிறார்கள்? நஞ்சை நிலத்தைப் பங்கு போட்டுக் கொள்வதிலேதான் பந்துக்கள் எல்லாரும் போட்டி போடுகிறார்கள்!

ஒரு ரோஜாக் குச்சி போனதற்காக உன்னை விரட்டி அடித்தேன். இப்பொழுது அந்தப் பூந்தோட்டமே கவனிப்பார் இல்லாமல் கிடக்கிறது. பூஞ்செடிக்குத் தண்ணீர் விடுவதற்கும், நெல்லுக்கு நீர் பாய்ச்சுவதற்கும் உள்ள வித்தியாசம் இந்த ஐந்து வருஷத்தில் எனக்கு நன்றாகத் தெரிந்துவிட்டது. அன்பு என்ற விஷயத்தை சாகப் போகிற சமயத்திலேதான் என்னால் உணர முடிந்தது. அதிகமாக ஒன்றும் எழுத எனக்கு ஓடவில்லை. பூவெல்லாம் தீய்ந்து கருகுவதற்கு முன்னால் இங்கு வந்து சேரவும்.

மெய்யப்ப பிள்ளை

பின் குறிப்பு:—

நீ வருகிற நாளைப் பார்த்துப் பார்த்து அக்கரைக் கிராமத்தில் தங்கம்மை வாடுகிருள். காரணத்திற்கே அவசியம் இல்லாத எங்கள் பண்ணைச் சண்டையினுல், பாவம், அந்தப் பெண் கிடந்து தவிக்கிறது.'

# 5

"மச்சான், நான் சொல்லுதேன்னு கோவிச்சிக் கிடாதே! நான் மட்டும் நீ கொடுத்த ரோசாவை வாடிப் போகவே விடவில்லே! என்னமா பூத்திருக்கு தெரியுமா!" என்ருள் தங்கம்.

"என்னைப் போல முரடா நீயி! பூவோட அருமை தெரிஞ்ச தங்கமில்லே." என்ருன் முத்தையன். தங்கம்மை இதைக் கேட்டு ரோஜா மலரைப் போல மௌன மாகச் சிரித்தாள்.

"தங்கம்! எனக்கு என்னமோ ஒரே ஒரு வருத்தந் தான். சாகிறதுக்கு முந்தி அவரை ஒரு தடவை பாக்க முடியாமேப் போச்சே!"

"முகத்திலே முழிக்காமப் போயிடச் சொன்ன ரில்லே? அப்படியே ஆயிட்டுது" என்ருள் தங்கம்மை.

"சேச்சே! கோபத்திலே அப்படிச் சொன்னரு. இப்ப பாரு! உயிலிலே இந்தத் தோட்டத்தை யாரு பேருக்கு எழுதி வச்சிருக்காரு? நம்பளுக்குத்தானே!" என்ருன் மிகப் பெருமையோடு முத்தையன்.

'மரம் வைத்தவன் தண்ணீர் ஊற்றுவான்' என்று வசனம். மலர்ச் செடிகளுக்குத் தண்ணீர் ஊற்ற முத்தையன் வந்துவிட்டான். அந்த மகிழ்ச்சியிலே சொக்கித் தங்கம்மையைப் போலவே மஞ்சள் ரோஜாவும் குலுங்கிக் குலுங்கிச் சிரித்தது!

# மனிதரில் இறைவன்

நெருப்பைப் பொழிந்துகொண்டிருந்த கோடை வெயிலில், மயூரநாதன் நடந்தான். உடம்பெல்லாம் வியர்வை கொட்டிக்கொண்டிருந்தது. அந்த உடம்பினுள் இருந்துகொண்டு தளராத ஊக்கம் உந்திச் செல்ல அவன் மேலே மேலே நடந்தான். ஓய்ச்சல் ஒழிவில்லாமல் அலைவீசும் இதயத்தின் ஆசாபாசங்களைப்போல் அந்தக் கருநீலக் கடல் ஓய்வொழி ின்றி அலைகளை வீசிவந்து கரையிலே மோதிச் சரிந்துகொண்டிருந்தது!

புனிதமான திருச்செந்தூர்க் கடற்கரையின் ஓரமாக 'வள்ளி ஒளிந்த வளநாட்டை'யும், ஊரை விட்டுத் தொலையில் உள்ள அந்த அழகான சிறிய 'குகைக் கோயிலை'யும் தாண்டி, மணற்பரப்பிலே நெடுந்தூரம் நடந்தான் மயூரநாதன். அப்பொழுது அந்தக் கரையின் மணல் திட்டிலேயிருந்த சிறு பாழ்மண்டபம் அவன் கண்ணில் பட்டது. ஆவலும் நம்பிக்கையும் அலைவீச, அவன் கடலைவிட்டு மணல் திட்டிலே ஏறினான்.

முதிர்ந்த கிழவனுடைய இதயக் குகையில் பூர்வ அனுபவங்களின் உணர்ச்சிச் சின்னங்கள் சிந்திச் சிதறிக் கிடப்பதைப்போல, அந்த மண்டபத்தினுள் உடைந்து போன சிற்பங்களும் மங்கிப் போன சித்திரங்களும் உருக் குலைந்து கிடந்தன. மேல் விதானம் ஏதோ ஓர் பேரிடியில் அதிர்ந்து போய்ச் சரிந்து கிடந்தது. அந்த இடியின் ஞாபகப் பதிவுகளுடன் கன்னங்கரேலென்று பூதங்களைப்

போலத் தூண்கள் நின்றுகொண்டிருந்தன. மயூரன் அவற்றைக் கடந்து உள்ளே நுழைந்தான். அப்பொழுது தான் அவன் கண்முன், அந்த மண்டபத்தினுள் படர்ந் திருந்த பாறையில் குடையப்பட்டிருந்த ஒரு சிறு குகை தெரிந்தது.

ஆமாம்; திருச்செந்தூர்க் கடற்கரையில் காற்றும் மணலும் அந்தக் குகையைச் சுற்றி மணல்வேலி கட்டி அதைச் சிதிலமாகாமல் இதுவரை காத்து வந்திருக் கின்றன. இது காரணமாக அந்தக் குகை மட்டும் சற்றும் சிதைவின்றி மனிதனுடைய தன்னம்பிக்கையைப்போல் எங்கோ ஒரு மூலையில் நிலைத்து நின்றது.

மயூரநாதன் அந்த அழியாத குகையின் அழகான வழுவழுப்பான பாறைச் சுவர்களைக் கூர்ந்து பார்த்தான். நிச்சயம், தன்னுடைய லக்ஷிய உருவங்களை வர்ணத்தில் அமைத்து நிலையாக நிற்கும்படி செய்வதற்கு உகப்பான சுவர்கள். ஆனால் அதென்ன? அந்தச் சுவர்களின் நெற்றி மட்டத்தில் ஏதோ சாஸனம் பொறிக்கப்பட்டிருக்கிறதே!

மயூரன் அந்தக் கல்வெட்டைப் படித்தான்:—

'இந்த உலகம் அழியக் கூடியது. இந்தக் குகையைச் சுற்றியுள்ள பொருள்கள் எல்லாம் அழியக் கூடியன. இந்தக் கோவில்களைச் சுற்றி நிற்கும் ஊர்கள், இங்கு நட மாடும் மனிதர்கள், அவர்களுடைய ஆசைகள் அன்புகள் எல்லாம் ஓர் நாள் அழிய வேண்டுந்தான். ஆனால்...'

மயூரநாதனுடைய உடல் பதறியது. அந்த வரிகளைத் தொடர்ந்து மேலே வாசித்தான்:—

'ஆனால் அழிகின்ற உலகத்திலும் அழியாத அமரன் உண்டு. கவிதைகள் எல்லாம் அந்த அமரனுடைய

புகழைப் பாடுகின்றன. கலைகள் எல்லாம் அவனைச் சித்திரித்து மகிழ்கின்றன. உலகம் அவனைக் கொண்டாடுகிறது. அவனுடைய வரவில் வானம் அசைகிறது. காற்றுப் பன்னீர் தெளிக்கிறது. பொங்குகிற மாகடலும் தலைதாழ்த்தி வந்து, அவனுடைய பாதங்களைத் தனது அலைக்கரங்களால் ஒற்றி அஞ்சலி செய்கிறது. அவன் மனிதரில் இறைவன்!'

மயூரநாதன் பெருமூச்சு விட்டான். அழிக்கும் கைகள் அணுகிவிடாத இடத்தில் தனது கலையை நிலை பெறச் செய்யவேண்டும் என்று இடந்தேடி அலைந்த ஓவியனுக்கு எண்ணம் வழங்கியதுபோல இருந்தது அந்த மகா வாக்கியம். அவன் நினைத்தான்:—

"ஆமாம்; அழிகின்ற இந்த உலகத்தில் அழியாத சிரஞ்சீவி ஒருவன் உண்டு. அவனுடைய உருவத்தை இந்த அழிக்க முடியாத குகையிலே வர்ணந் தீட்டுவேன். பொங்கிவரும் மாகடலும் அவனை வணங்கித் துதிக்கும். அலைகள் தாழ்ந்து வந்து அவனுடைய பாதத்திலே சரிந்து விழும்."

மயூரன் குகையைவிட்டு வெளியே வந்தான், அந்த மகா வாக்கியம் வர்ணித்த மகாபுருஷனைக் கண்ணாரக் கண்டுவந்து ஓவியத்திலே சித்திரிக்க வேண்டும் என்ற லக்ஷியத்துடன்.

## 2

உலக மகாவீரர்கள் என்று சரித்திரம் வியக்கிறதே, கவிஞர்கள் பாடுகிறார்களே, அந்த மகா வீரர்களை எல்லாம் தேடிப் புறப்பட்டான் மயூரநாதன்.

ஆயிரம் யானைகளை மத்தகத்தைப் பிளந்து அலறச் செய்த வீரஸிம்மன்; பதினாயிரம் ரதங்களைத் தூள் தூளாகிக் காற்றிலே சிதறவிட்ட இடியேறு; நாற்பதினாயிரம் குதிரைப்படைகளை, ஏறிவந்த வீரர்களோடு கண நேரத்தில் மண்ணிற் புதைத்த சண்டமாருதன்; கப்பல்களை ஆழ்த்திய திமிங்கிலன்; வானூர்திகளை வானுலகு சேர்த்த அக்னிமேகன்—எல்லாரையும் தேடினான்.

குழந்தைகள் அலறித் துடிக்கும், வீரர்கள் மூர்ச்சையாவார்கள், அவன் பெயரை உச்சரித்தால்! ராஜ்யங்கள் எல்லாம் நடுநடுங்கும். மண்டலாதிபதிகளின் சிரத்தினின்று மகுடங்கள் கீழே விழும். அப்படிப்பட்ட பராக்கிரமர்கள் எல்லாரையும் தேடினான் மயூரன். கடைசியில்...

கடைசியில், மயூரநாதனுடைய முயற்சி வீணாகவில்லை. அவன் குகைக்குத் திரும்பியபோது வெற்றியினால் அவனுடைய உள்ளம் பூரித்தது. ஆனால்...?

தான் கண்ட வீரர்களில் எல்லாம் பெரும் வீரனை, பராக்ரமர்களில் எல்லாம் அதிபராக்ரமனை, தான் கண்ட பலசாலிகளில் எல்லாம் மகா பலசாலியை மூடி விழிக்கும் நேரத்தில் அந்தச் சுவரிலே வர்ணந்தீட்டினான். ஆனால்...?

வானம் அசையவில்லை. மெல்லிய காற்று இழையவில்லை. அந்த வாளேந்திய வீரனுக்கு அஞ்சி அலை கடலும் தலை தாழ்த்தக் காணோம். சாஸனத்தின்படி எதுவுமே நடைபெறவில்லை!

வேதனையோடு அந்த வர்ணங்களைக் கருநீலக் கடலிலே கொட்டிவிட்டு மறுபடியும் புறப்பட்டான் மயூரநாதன். அவனுடைய மனம் சாஸனத்தில் வர்ணித்திருந்த லக்ஷியத்திலேயே லயித்திருந்தது!

# 3

பிறந்து இறந்து உழலும் மானுடருக்குப் பிறப் பிறப்பின்றி நிற்கும் பரம் பொருளைக் காட்டி, அவர்களை மோக்ஷ ஸாம்ராஜ்யத்துக்கு அழைத்துச் செல்வதாகக் கூறும் ஆசாரியர்களைத் தேடிப் புறப்பட்டான் மயூர நாதன்.

வானம் அசையவும், மென்காற்றுப் பனி சிதறவும், கடல் அலை கரங்குவிக்கவும் கூடிய மகான் அவர் களிடையே நிச்சயம் இருப்பான்; அந்த மகாபுருஷனைத் தரிசித்துவந்து வர்ணந்தீட்டுவேன்—என்று.

மயூரநாதன் நீண்ட நாட்கள் அலைந்தான். மடா லயங்கள், கோயில்கள், ஞானச் சாலைகள், வேள்விக் கூடங்கள், தபோவனங்கள், அமைதியான நீர்நிலைகள்— இப்படி எத்தனையோ இடங்கள் சென்று, சென்று ஆராய்ந்தான்.

மயூரனுடைய முயற்சி வீண்போகவில்லை. ஐந்து ஆண்டுகளுக்குப் பின்னர் அவன் குகைக்குத் திரும்பிய போது உள்ளத்தில் வெற்றி பொங்கிக் கொண்டிருந்தது. ஆனால்...?

மயூரநாதன் வர்ணந் தீட்டினான். தான் கண்ட சமய ஞானிகளில் எல்லாம் ஞானியை, பரிசுத்தவான் களில் எல்லாம் பரம பரிசுத்தனைச் சித்திரத்திலே, கமண்டலக் கையனாக வரைந்தான். ஆனால்?

என்ன நேர்ந்தது? வானம் அசைந்ததா? இல்லை. காற்று? பன்னீர் தெளிக்கவில்லை. அலைகள் சற்றுவது இந்தப் பக்கம் எட்டி நகர்ந்தனவா? இல்லவே இல்லை. சாஸனம் கூறியபடி எதுவும் நடக்கவில்லை.

மனம் ஒடிந்த மயூரன் வர்ணங்களைக் கடலிலே கரைத்துவிட்டு மறுபடியும் புறப்பட்டான்.

# 4

ஆறறிவு படைத்த மக்களுக்கு நவம் நவமான தத்து வங்களைக் கண்டு தருகிறோம் என்று சொல்லி நித்தம் புதிய புதிய ஆராய்ச்சிகள் நடத்துகிறார்களே விஞ்ஞானி கள், அவர்களைத் தேடிப் புறப்பட்டான் மயூரன்.

உலகத்தை ஒரு விநாடியில் கடப்பதற்கும், ஏழ் கடலையும் ஒரு சிறு குடத்துக்குள் அடைத்து விடுவதற் கும், அக்னியைப் பனிக்கட்டியாக மாற்றுவதற்கும் அதிசய மார்க்கங்களைக் கண்டுபிடிக்கிற அந்த ஆராய்ச்சி மூர்த்திகள் அனைவரையும் சென்று தேடினான்.

மயூரனுடைய யத்தனம் வீணாகவேயில்லை. குகைக்கு அவன் திரும்பியபோது முன் எப்பொழுதும் இல்லாத நம்பிக்கை இதயத்தில் பொங்கிக்கொண்டிருந்தது. ஆனால்...?

விஞ்ஞானிகளில் எல்லாம் விஞ்ஞானியை, அறிஞரில் அறிஞனை ஆராய்ச்சிக் கையாளாகச் சித்திரந் தீட்டினான். ஆனால்...?

பாவம், வானம் அசையக் காணோம். காற்று மென்மையாகக் காணோம். கடல் அலை அடங்கிற்றில்லை. என்ன ஏமாற்றம்! இயற்கையின் நியதியில் எள்ளளவும் மாறுதல் ஏற்படவில்லையே!

மயூரநாதனுடைய தலை சுழன்றது. வெளியே அடித்த காற்று அவனுடைய மூளைக்குள்ளே புயல்

வீசியது. வெளியே பொங்கிய கடல் அவன் இதயத்தில் குமுறியது. வேகமாக எழுந்தான்.

"அட பொய்ச் சாஸனமே, என்னையும் என் கலையையும் அழித்துவிடப் பார்க்கிற கல்வெட்டே, நீ அழியக் கடவாய்!"

இப்படிச் சொல்லிக்கொண்டே வர்ணக் கிண்ணங்களை அந்தக் கல்வெட்டின்மேல் வீசினான். கல் உடையக் காணோம். கிண்ணங்களே சிதறின! மறுவினாடி, அந்தக் கிண்ணங்கள் சிதறியதுபோல் 'கல கல'வென்று மற்றோர் ஒலி கேட்டது!

மயூரநாதன் திடுக்கிட்டு நின்றான். அவனுடைய எதிரில் சிலம்பு கொஞ்ச நடந்து வந்து நின்றாள் அந்தக் கடலின் கன்னி. அவளுடைய கருநீலப் புடவை, அலைகளில் பதினெட்டு முழம் கிழித்து மேனியிலே ஓடவிட்டது போலத் தோற்றமளித்தது. அவளுடைய உடலில், எத்தனை வர்ணங்கள் உண்டு உலகில் அத்தனையும், ஒளி வீசிக்கொண்டிருந்தது. அந்தச் சங்கு வளையல்களும், மூக்குத்தியிலிருந்து ஒளி வீசிய கோலக் கடல் முத்தும் மயூரநாதனுடைய உள்ளத்தில் அதிசயமான ஒரு பக்தியை விளைத்தன.

"மனத்தையே கொண்டு கல்லிலே வீசி எறிவது போலக் கிண்ணங்களை ஏன் இப்படி எறிந்தாய்?" என்று அவள் கேட்டாள்.

மயூரநாதனுக்கு ஆவேசம் வந்தது.

"கடல் அன்னையே, நீதான் என்னுடைய லக்ஷியங்களுக்கெல்லாம் சாக்ஷி. நான் வரைந்துள்ள இந்த மூன்று மகான்களில் ஒருவரும் நீ வணங்குவதற்கு உரியவர் இல்லையா!"

கடல் அன்னை ஒரு சிரிப்புச் சிரித்தாள். பௌர்ணமிக் கடலில் அலைகள் பொங்கிவந்து கரையிலே முத்துக் களைச் சிதறுவதுபோல இருந்தது அந்தச் சிரிப்பு.

''உலகப் பிரசித்திபெற்ற மகாவீரன் இவன். அண்ட பிண்ட சராசரம் எல்லாம் இவனே தலைவன் என்று கைகூப்பி வணங்குகிற இந்த மகாவீரன் அமரனில்லையா?''

''மைந்தா, உடல் வலிமையின் பேரால், வீரம் என்ற கவசத்துக்குள் ஒளிந்துகொண்டு, மனித குலத் தைப் பூண்டோடு அழிக்க முயற்சிக்கும் இந்த ஹிம்ஸா மூர்த்தியை மகாபுருஷன் என்று நினைத்துவிட்டாய்?''

மயூரன் பதில் சொல்லாமல் அடுத்த சித்திரத்துக்கு முன்னால் நின்றான்.

கடல் அன்னை மறுபடியும் பேசினாள்.

''என் தெய்வம், உன் தெய்வம் என்று எங்கணும் தொடர்ந்து எதிர் வழக்காடி விவாதச் சேற்றிலே தெய்வத்தை அழுத்தி விடுகிற சழக்கர்களில் சர்வ சமய சமரஸ ஞானியைத் தேடி அலைந்து வீணாகிவிட்டாயே!''

மயூரன் அந்த வார்த்தைக்கும் பதில் சொல்லாமல் அடுத்த சித்திரத்தைக் காட்டிக் கேட்டான்:—

''இயற்கையை வென்று ஆட்சி செய்யும் இந்த ஞானவீரன், மகா விஞ்ஞானி, இவனுங்கூட மகா புருஷனில்லையா?''

கடல் அன்னை இந்த முறை சிரிக்கவில்லை. ஒரு கணம் மௌனமாக நின்றாள். பெரிய அலை ஒன்று பொங்கி வருவதற்குமுன் ஒரு கணம் நீர்ப்பரப்பிலே ஓர் அமைதி தோன்றுமே, அதைப்போல இருந்தது

அந்த மௌனம். அடுத்த விஞடி அலை பிரும்மாண்டமாகப் பொங்கி வந்தது!

"அழியப் போகிற உலகத்தை, சீக்கிரமே அழித்து விடுவதற்கு வேண்டிய நாசினிகளைச் சிருஷ்டிக்கிருர்களே அந்த புத்திசாலிகளிடம், நிரந்தர சேவாமூர்த்தியைத் தேடிஞயோ?"

மயூரனுடைய கண்களில் நீர் துளித்தது, அவன் கேட்டான்:—

"தாயே, அப்படியாஞல் அஹிம்ஸை என்ற அற்புதமான கருவியிஞல் உலகத்தை வென்றுவிடுகிற மகாவீரனும், சர்வ சமய சமரஸம் என்ற உயர்ந்த உபதேசத்திஞல் உலகுக்கு ஞானமார்க்கம் காட்டும் ஆசாரியனும், அணுசக்தியையும் மிஞ்சிய ஆத்ம சக்தியை உலகுக்குக் கண்டுபிடித்துத் தந்த மகா விஞ்ஞானியுமான ஒரு புண்ணியமூர்த்தி உலகத்தில் உண்டா?"

"புதல்வா, அப்படிப்பட்ட மகாத்மா ஆயிரம் ஆண்டுகளுக்கு ஒரு முறை பூமியில் அவதரிக்கிருன். அவனுடைய வரவிஞல் வானம் அசைகிறது. காற்று பனிநீர் சிதறுகிறது. என்னுடைய அலைக்கரங்களிஞல் அவனுடைய பாதங்களைத் தொட்டு நான் என்னைப் புனிதப்படுத்திக் கொள்கிறேன்."

"அன்னையே, அப்படியாஞல் இப்பொழுதே சென்று அப்படிப்பட்ட மனிதர் எங்கிருக்கிருர் என்று கண்டு வந்து அவரை......"

"தம்பி, அவசரப்படாதே. மனிதர்கள் அவனை உணர்கிற தருணத்தில் அவனுடைய லக்ஷியம் சித்தியாகி அவன் மறைந்துவிடுகிருன்."

"அப்படியானால்?"

"அவன் பேரண்டமாக விளங்குகிற நித்திய வஸ்து. அவன் பிறப்பு இறப்பு அற்ற மூலப்ரக்ருதியில் ஓர் அம்சம். ரூப நாமமற்ற அந்த வஸ்துவோ கலைகளுக்கெல்லாம் அப்பாற்பட்டது. அந்தச் சித்திரத்தை வரையவேண்டிய இடம் பாறையில்லை, உள்ளந்தான்!"

இறகின் எல்லையை உணர்ந்தவன்போல மயூரன் எழுந்தான். அலை வீசிக் குமைகிற அந்தக் கடலுக்குள்ளே இறகை எறிந்தான்.

"அம்மா, இன்றே அறிவு வந்தது. மனிதரில் இறைவனை உணர்ந்தேன். தங்கள் ஆசீர்வாதம்."

தாழ்த்திய தலையை உயர்த்திப் பார்ப்பதற்கு முன் எதிரே இருந்த அன்னை மறைந்துவிட்டாள்.

மயூரன் கண்ணைத் துடைத்துக்கொண்டே குகையிலிருந்து எழுந்தான். வெளியே அலை வீசிக்கொண்டிருந்த கடலின் ஒலியிலே அன்னையின் இனிமையான குரல் கேட்டது:—

" ஒப்புடையன் அல்லன்; ஓர் ஊரன் அல்லன்;
ஓர் உருவம் அல்லன்; ஓர் உவமன் இல்லி;
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன்
இவன் இறைவன் என்று எழுதிக் காட்டொணாதே!"

# நாடக உலகம்

"இரண்டாவது வகுப்பு வண்டியில் போகிறவர்களிடந்தான் இந்த மாதிரிக் கெட்ட பழக்கம் உண்டு; எதிரே இருப்பது மனிதனா, மிருகமா என்றுகூடக் கவனிக்காமல் புஸ்தகத்துக்குள் முகத்தைப் புதைத்துக் கொள்வார்கள். மூன்ருவது வகுப்பிலும்கூட இந்த வியாதி தொத்திக் கொண்டதா—ஸார், உங்களைத்தான்!'' என்று ஆரம்பித்தார் எதிரேயிருந்த அந்தப் பிரயாணி.

''இன்று இடம் கிடைக்கவில்லை; மற்றப்படி இவரும் இரண்டாவது வகுப்பு என்ற வியாதிக்கு உள்ளானவர் தான்'' என்று சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு எனக்கு ஒரு 'டோஸ்' கொடுத்தார் என் நண்பர் சீர்திருத்த வாதி. நம்முடைய ஒண்டு-பிரயாணி அவர்!

கையிலே வைத்திருந்த 'ரயில் வண்டிக்குள்' என்ற நாடகப் புஸ்தகத்தைக் கீழே வைத்துவிட்டு, எதிரேயிருந்த நண்பரைப் பார்த்தேன். கிராப்புத் தலை, நேர் வகிடு. முடி வெட்டி மூன்று மாதமாவது ஆகியிருக்கும். நிலையில்லாமல் சுழன்றுகொண்டிருக்கும் ஒரு பரபரப்பு, அந்த விசாலமான பெரிய கண்களில்! தலையைத் தூக்கி நான் அவரைப் பார்த்ததும் அகலமான ஒரு சிரிப்புச் சிரித்தார். முன் வரிசைப் பற்களில் இரண்டு, தங்கம் கட்டி மினுமினுத்தன.

"என்ன படிக்கிறீர்கள், இவ்வளவு மூங்கி முழுங்கிப் போய்—எதிரேயிருக்கிற மனித சரீரமே தெரியாமல்?"

"ஒரு நாடகம், 'ரயில் வண்டிக்குள்' என்று பெயர்—அழகான வாழ்க்கைச் சித்திரம்."

"சரிதான்! வாழ்க்கைச் சித்திரமா? அதனுல்தான் நிஜ ரயில் வண்டிக்குள் நடக்கும் நிஜமான வாழ்க்கை நாடகங்களை அலட்சியம் செய்துவிட்டீர்கள்" என்ருர் அவர், கிறுதக்காக. கண்ணிலே வெளியான குறுகுறுப்பு சும்மாவா இருக்கும்!

ஒண்டு-பிரயாணத்துக்கு எங்கே இடையூறு நேர்ந்து விடுமோ என்ற கவலையில், எனது சீர்திருத்த நண்பர் பேச்சை மாற்றினுர்.

"தமிழில் நாடக நூல்கள் ரொம்பக் குறைவு. என்னைக் கேட்டால் இனிமேல் நம்முடைய எழுத்தாளர்கள் எல்லாம் கதைகளே எழுதக்கூடாது என்பேன். 'எழுத்தாளன் என்று பேனுவில் மை போடுகிற ஒவ்வொரு நபரும், குறைந்தது ஒரு பத்து நாடகங்களாவது எழுதிவிட்டுத்தான் பிறகு கதை எழுதலாம்' என்று ஒரு சட்டம் கொண்டு வரவேண்டும். இந்த ஒரு காரியம் செய்வதற்காகவாவது..."

"அடுத்து வருகிற தேர்தலில் நீங்கள் நிற்க வேண்டுமாக்கும்!" என்று நண்பரின் வாக்கியத்தை முடித்தேன்.

எதிரே இருந்த நேர் வகிடு நண்பர் சீர்திருத்த வாதியை ரட்சிக்க முன் வந்தார்.

"வாஸ்தவந்தான்! தமிழில் நாடகம் ரொம்பக் குறைவு. அது மட்டுமில்லை; சிறந்த முறையில் நடிகர்களைப் பழக்குவதற்கும் ஒரு நடிப்புப் பயிற்சிசாலை ஏற்படுத்த வேண்டும்" என்ருர் அவர்.

எதிர் பெஞ்சில் வெற்றிலை பாக்குக் குதப்பிக் கொண்டிருந்த இன்னொருவர் — நாடகப் பிரியர் போல் இருக்கிறது, வயது ஐம்பது இருக்கலாம்—எங்கள் பேச்சுக்குள் பக்குவமாக நுழைந்தார்.

''ஆமாம். இந்தக் காலத்தில் நாடகமே மங்கி விட்டது. முன்னால் எல்லாம், அடாடாடா...''

''முன்னால் எல்லாம் என்று வார்த்தையை ரொம்ப தூரம் இழுக்காதீர்கள்!...ஒரு பதினைந்து வருஷத்துக்கு முன்னால்'' என்று ஒரு திருத்தப் பிரேரேபணையைச் சொருகினார் சீர்திருத்தவாதி.

''பதினைந்து வருஷத்துக்கு முன்புதானே? ஆமாம். சூரி, சூரி என்று கேள்விப்பட்டிருக்கிறீர்களோ?'' என்று கேட்டுக்கொண்டே, அடுத்த பக்கத்துப் பெஞ்சில் கூட்ட நெருக்கடியிலே அவஸ்தைப் பட்டுக்கொண்டிருந்த பேர்வழி, என் அருகிலே வந்து சம்மணம் போட்டு உட்கார்ந்துகொண்டார். அவருக்கு வயது நாற்பத்தைந்து இருக்கும். குடுமிதான்; சட்டை கிடையாது. அங்கவஸ்திரத்தை உலைத்து உடம்பைப் போர்த்தியிருந்தார்.

''சூரிதானே? சூரி. சூரியநாராயணன்! ஆமாம். கேள்விப்பட்டிருக்கிறேன். அடாடா!'' என்றார் ஸ்ரீமான் வெற்றிலை பாக்கு.

''அநியாயமாய்ப் போயிட்டான், சார்!'' என்றார் அங்கவஸ்திரம், அங்கலாய்த்துக்கொண்டே.

''என்ன, ஆசாமியே காலியா!'' என்று திகைப்போடு கேட்டார், இதுவரை மௌனமாக இருந்த அந்த நேர் வகிடு நண்பர்.

"ஆமாம். அதே நாடகக் கம்பெனியில் யாரோ ஒரு பெண் நடிகையோடு காதல். இதனால் அவனுடைய மனைவியே அவனுக்கு விஷம் வைத்துவிட்டாள்" என்றார் அங்கவஸ்திரம்.

"என்ன அநியாயம் ஐயா இது! சூரி இறந்துவிட்டான் என்கிறீர்களே! இந்த உலகத்துக்குத்தான் நாக்கில் நரம்பு கிடையாதா?" என்றார் பெஞ்சின் ஓரத்தில் இதுவரை ஒதுங்கிக் கிடந்த ஒரு ஒட்டிலி.

'வெற்றிலை பாக்கு' இப்பொழுது பேசினார்: "சூரி இறக்கவில்லை; இன்னும் உயிரோடுதான் இருக்கிறான். இருந்தும் என்ன பிரயோஜனம்? இறந்த மாதிரிதான்!" என்றார் ஒரு தீர்மானத்தோடு.

"அப்படியென்றால்?"

"அவனுக்குப் பக்ஷவாதம் வந்து கை கால் அசைக்க முடியாமல் போய்விட்டது."

பக்ஷவாதம் என்றதும் சீர்திருத்தவாதிக்குப் பிடி கிடைத்துவிட்டது. "பக்ஷவாதந்தானே? இருக்கும், நிச்சயம் இருக்கும். இந்த நடிகர்களுக்கே எப்பொழுதும் நான் சொல்லுகிற புத்திமதி ஒன்று உண்டு: 'தம்பிகளா! உடம்பை நன்றாகக் கவனித்துக் கொள்ளுங்கள். பிறகு காலைக் கையை அடித்துக் கொள்ளாதீர்கள்' என்று. நம்முடைய வார்த்தையை எவன் கேட்கிறான், ஸார்? இந்த ஒரு கார்ரியத்துக்காகவாவது அடுத்து வருகிற தேர்தலில்..."

நேர் வகிடு நண்பர் சிரித்தார்.

"என்ன சிரிக்கிறீர்கள்? உங்களுக்கு ஏதாவது தெரியுமா சூரியைப் பற்றி?" என்று கேட்டேன்.

''தெரியும். ஆனால் எனக்குத் தெரியாத விவரங்களை எல்லாம் இவர்கள் சொல்லுகிறார்கள். அதனால்தான் ஆவலோடு கேட்டுக்கொண்டிருக்கிறேன்.''

''அப்படியானால் உங்களுக்குச் சில விவரம் தெரியுமோ?''

''தெரியும். அதெல்லாம் அவனுடைய மரணத்துக்கு முன்பு நடந்தவை.''

''அப்படியானால் சூரிக்கு அவன் மனைவி விஷமிட்டது உண்மைதானா?'' என்று கேட்டேன்.

அவர் சொன்னார் :

## 2

சோக நடிகர் சூரியின் வாழ்வே ஒரு சோக நாடகந்தான். ஆனால், உலகம் அவரைப்பற்றிச் சொல்லுகிற இந்த வதந்திகளைப் பார்த்தால் அது வெறும் சோகம் மட்டும் இல்லை; ஹாஸ்யமாகவும் இருக்கிறது.

சோக நடிகர் சூரிக்குப் பிரமாதமான புகழ். அவர் நடிக்கிறார் என்றால், ஆயிரக்கணக்கான ஜனங்கள் அடிபிடி போட்டுக்கொண்டு கொட்டகையை நிரப்பினார்கள். 'சோக சிகரம்' என்றும், 'சோக மன்னன்' என்றும், 'சோக சக்கரவர்த்தி' என்றும், அவர் நாடக வானிலே பற்பல பட்டங்களுடன் பறந்து கொண்டிருந்தார். ஆனால் அவருடைய சொந்த வாழ்க்கையில் மட்டும் ஒரு குறை.

சோக நடிகர் சூரியைத் தெரியும் என்று சொல்லிக் கொள்வதில் நண்பர்களுக்கு ஒரு பெருமை. அவர் தங்களுக்கு உறவு என்று கொண்டாடுவதில் பந்துக்களுக்கு அலாதி இன்பம். 'அவர் எங்கள் வீட்டில்

விருந்து சாப்பிடுகிறார்' என்று விளம்பரப் படுத்திக் கொள்வதில் பெரிய மனிதர்களுக்கு ஒரு திருப்தி. ஆனால், அவர் சொந்த வாழ்க்கையில் மட்டும்...!

அவர் பெயரை வைத்து ஆயிரக்கணக்கில் சம்பாதித்தார் நாடக முதலாளி. ஆயிரக்கணக்கான ரஸிகர்கள் அவர் நடிப்பை வியந்தார்கள். ஆயிரம் ஆயிரம் மக்கள் அவர் நடிப்பைக் காண நூற்றுக்கணக்கான மைல்கள் தாண்டி வந்தார்கள். ஆனால் அவருடைய சொந்த வாழ்க்கையில் மட்டும் அப்படி என்ன குறை அவருக்கு?

அவருடைய நடிப்பைப் பார்த்து ஒரு நாள்கூட ரஸித்ததில்லை அவருடைய மனைவி!

ஹரிச்சந்திர மயான காண்டத்தில் பிணத்தின் புகைக் குமைச்சலுக்கு மத்தியில் சந்திரமதி நின்று பிரலாபிப்பதையும், கடமை என்பதில் சொந்த மனைவியைக்கூட லட்சியம் செய்யாமல் கையிலே தடிக் கம்பு தாங்கி அவன் காவல் செய்து அமருகிறதையும் கண்டு களித்து, நடிப்பின் அந்த சோக எல்லையிலே நின்று, கூடை கூடையாகச் சூரியின் மேலே மலர்களைச் சொரிந்தது மனிதர் கூட்டம்! அந்தக் கூட்டத்தில் உட்கார்ந்து ஒரு நாளாவது அவருடைய மனைவி அந்தப் பெருமையைக் கண்டு அனுபவித்து அறியாள்!

அவருடைய வாழ்க்கையில் இது ஒரு பெரிய குறை என்று 'உலகம்' நினைத்தது. ஆனால் அவருக்கு என்னவோ அப்படிப் படவில்லை. என்றாலும், இந்த 'உலகம்' இருக்கிறதே, இது சும்மா இருக்குமா?

நண்பர்கள் எத்தனையோ முறை சொல்லிப் பார்த்தார்கள். அவருடைய உறவினர்கள் எல்லாம் தூரம் தொலைவிலிருந்து வந்து, அவருடைய வீட்டிலே தங்கி,

அவரோடு இருந்து சாப்பிட்டுவிட்டு நாடகத்துக்குப் புறப்படுவார்கள். அவளையும் அழைத்துப் போக அவர்கள் துடித்தார்கள். அவள் மட்டும் ஏன் இப்படி வீட்டில் அடைந்து கிடக்க வேண்டும்?

"இது நீதியா? மனைவியை நடத்துகிற முறையா இது?" என்று கேட்டது 'உலகம்!'

உலகம் என்ன? அவருடைய மனைவியே ஒரு நாள் அவரைக் கேட்டு விட்டாள்!

சூரிக்கு ஒன்றும் ஓடவில்லை. என்னென்னவோ சொல்லி இதுவரை நாட்களைக் கடத்தி விட்டார். இனி மேல் தப்புவது முடியாது என்று ஆகிவிட்டது. அவள் பேசாமல் இருந்தாலும் இந்த மனித சமூகத்திலுல் அப்படி இருக்க முடியவில்லை. தன் கணவனுடைய திறமையை அவள் பார்த்து வியக்க வேண்டும் என்பதில் உலகுக்கு அத்தனை அக்கறை! "உறவினம்" என்ற ஒன்று அதற்காகவே கச்சை கட்டி நின்றது. என்ன செய்வார், பாவம், சூரி? அவரால் தப்பிக்க முடியவில்லை.

## 3

ஹரிச்சந்திரன் நாடகம் ஒரே ஆர்ப்பாட்டமாக நடந்தது. அந்தப் பெரிய கொட்டகையில் ஐயாயிரத் துக்கும் மேலான ஆடவர் பெண்டிர் குழந்தைகள் 'ஜிவ்' என்று மொய்த்து நின்று கை தட்டினார்கள். வந்தனோப சாரம் சொல்ல எழுந்த நகர மன்றத் தலைவர், அன்று சூரி அவர்களுக்குச் 'சோக சிற்பி' என்று ஒரு புதிய பட்டமே வழங்கிவிட்டார்.

நாடகம் முடிந்ததும், ஜனத் திரள் சூரியையும் அவருடைய மனைவியையும் சூழ்ந்து நின்றுகொண்டு,

வெகு நேரம் வரை வீட்டுக்குப் போக முடியாமல் செய்தது. அந்த நெருக்கடியைச் சமாளித்துக்கொண்டு, ஒரு வகையாக அவர்கள் வீடு திரும்பியபோது மணி மூன்று.

களைப்போடு வந்து படுத்தார் சூரி. காலையில் அவர் எழுந்தபோது மணி பத்து அடித்துவிட்டது!

''லக்ஷ்மி!'' என்று கூப்பிட்டார். வழக்கம்போல் காப்பி டம்ளருடன் அவரை எழுப்ப அன்று அவள் வரவில்லை.

லக்ஷ்மி இன்னும் எழுந்திருக்கவில்லை. உள் கூடத்தில் படுத்திருந்தாள். ஆனால், உறக்கம் இல்லை. அவளுக்குக் கடுமையான ஜுரம்!

சூரி எழுந்து வந்து பார்த்தார். லக்ஷ்மியின் உடம்பைத் தொட்டார். நெற்றியெல்லாம் நெருப்பாகக் கொதித்தது.

''உடம்புக்கு என்ன லக்ஷ்மி?'' என்று கேட்டார் சூரி.

''ஒன்றுமில்லை. நேற்று ராத்திரி நான் நாடகம் பார்க்க வந்திருக்கக் கூடாது.''

லக்ஷ்மிக்குக் கண் கலங்கியது. சூரி திகைப்பிலே நினைவற்று நின்றார்.

''அந்த மயானத்தில், ஒட்டி உலர்ந்து போன பஞ்சைக் கோலத்தில், கந்தைத் துண்டு கட்டிய நிலையில் உங்களைப் பார்த்ததிலிருந்து எனக்கு எப்படியோ இருக்கிறது. உண்மையாகச் சொல்லுங்கள், நீங்கள் தினமும் இப்படித்தான் மேடையில் நிற்கிறீர்களா?''

''ஆமாம், அதனால் என்ன?''

"உங்களுடைய இந்த அலங்கோலத்தைப் பார்த்தா ஜனங்கள் இப்படிச் சந்தோஷப்படுகிறார்கள்? என்ன கேவலமான உலகம் அது!"

"லக்ஷ்மி! அதெல்லாம் நாடகம்—கலை."

"கலையாவது, மண்ணாங்கட்டியாவது! ஆயிரம் பெண்கள் இருந்தார்களே அந்தக் கூட்டத்தில், ஒருத்திக் காவது மனசில் துளி ஈரம் இல்லையா? ஒருத்திக்காவது புருஷனுடைய அருமை தெரியாதா? கை தட்டுகிறார்களே கை..." என்று பொங்கினாள் லக்ஷ்மி. அவளுடைய கண் 'சிவு சிவு' என்றிருந்தது. ஜுரத்தின் வேகத்தில் உதடு படபடத்து.

"லக்ஷ்மி! குழந்தை மாதிரிப் பேசுகிறாயே! மேடையில் நடப்பதெல்லாம் வெறும் கற்பனை...பொய்..."

"பொய்தான். ஆனாலும் என்ன கொடூரமான பொய்! என்னால் தாங்க முடியவில்லை. எனக்கு என்னவோ செய்கிறது!"

"லக்ஷ்மி! உனக்குக் கலையைப்பற்றி ஒன்றும் தெரியாது. இல்லாததை இருப்பதுபோலக் காட்டுவதுதான் கலை. அது ஒரு தன்னேமாற்றம். நடிப்பவன், பார்ப்பவன் இருவரும் ஒன்று சேர்ந்து செய்கிற ஒரு ரஸமான சதி—ஒரு இனிய மயக்கம். அது நிஜம் இல்லை."

லக்ஷ்மிக்குப் படபடப்பு அதிகரித்தது.

"என்னென்னவோ சொல்கிறீர்களே, இது மேடையா? நீங்கள் பேசுவதையெல்லாம் ஈவிரக்கமில்லாமல் கேட்டுத் தானும் பொய்க் கண்ணீர் வடிக்க மேடையிலேதான் ஒரு சந்திரமதி உண்டு. இது, இது

வீடு. நான் உங்களைக் கைப்பிடித்த மனைவி. நாடக மேடைச் சந்திரமதி இல்லை. இந்த வித்தியாசம் உங்களுக்கு எப்படிப் புரியும்? ஒரு பெண்ணாய்ப் பிறந்திருக்க வேண்டும்; மனைவியாய் வாழ்ந்திருக்க வேண்டும்.''

லக்ஷ்மிக்கு அப்படியே கண் சொருகியது. நினைவு மயங்கி வாழைத்தண்டு போல உடம்பெல்லாம் குளிர்ந்தது அவளுக்கு. மயக்கத்திலிருந்து மீண்டும் நினைவு திரும்புவதற்கு டாக்டர்தான் வரவேண்டியிருந்தது.

''சூரி! இது நரம்புகள் சம்பந்தப்பட்ட வியாதி. மருந்துகள் அதிகம் வேண்டியதில்லை. உறங்குவதற்கு மட்டும் மாத்திரை கொடுத்திருக்கிறேன். சரியாகி விடும்!'' என்று சொன்னார் டாக்டர்.

சூரிக்கு அன்று இரவும் ஸ்பெஷல் நாடகம். கலெக்டர் தலைமையில் ஹரிச்சந்திர நாடகம்!

லக்ஷ்மி உறங்கிக் கொண்டிருந்தாள். அப்பொழுது இரவு எட்டு மணி. ''லக்ஷ்மி'' என்று கூப்பிட்டார்.

''நிம்மதியாக உறங்குகிறாள். உங்களுக்கு நேரமாகிறது. நீங்கள் போங்கள். நான்தான் பக்கத்தில் இருக்கிறேனே!'' என்றாள் லக்ஷ்மியின் தாயார்.

எல்லையற்ற சோகத்துடன் சூரி அன்று மேடைக்குச் சென்றார். அவருடைய நடிப்பு அபாரம் என்றும், சோகத்தின் 'எவரெஸ்ட்' உச்சியையே எட்டிவிட்டார் சூரி என்றும், உலகம் கொண்டாடிற்று.

அதே நேரத்தில் இரவு பன்னிரண்டு மணிக்கு— வீட்டிலே லக்ஷ்மி கண் விழித்தாள்.

''அம்மா! அவர் எங்கே?''

தாயார் அவளுடைய நெற்றியைத் தொட்டுக் கொண்டே பேசினுள்.

"என்னம்மா இது! இங்கேயே இருந்தால் தொழில் நடப்பது எப்படி? இன்று 'ஸ்பெஷல்' நாடகம். ஏகப் பட்ட கூட்டம். ஜில்லா கலெக்டர் தலைமையில்..."

"ஸ்பெஷல் நாடகமா!" என்று கேட்டுக் கொண்டே மறுபடியும் மயக்கமானுள் லக்ஷ்மி.

நாடகம் முடிந்து சூரி வீட்டுக்கு வந்தபோது லக்ஷ்மிக்கு ஜுரம் கொதியாகக் கொதித்துக்கொண் டிருந்தது. சுய நினைவு இல்லை.

அத்தனை நேரத்திற்குப் பிறகு அந்த இரவில் டாக்டர் வரவேண்டியிருந்தது!

"மிஸ்டர் சூரி! என்னை மன்னிக்க வேண்டும். நான் எதிர்பார்த்ததைவிட இது அதிகக் குழப்பமாய் இருக் கிறது. ஏதோ ஒரு பெரிய மன அதிர்ச்சி ஏற்பட்டிருக் கிறது. என்னிடம் நிஜத்தைச் சொல்லுங்கள். நீங்கள் ஏதாவது காதல் விவகாரத்தில் சிக்கிக் கொண்டு விட்டீர்களா?"

சூரிக்குக் கோபம் வந்தது.

"நாடகக்காரன் என்று நினைத்து விட்டீர்கள். அப்படித்தானே? மனைவிக்கு வியாதி என்ருல் புருஷன் எங்காவது காதலிலே சிக்கியிருக்க வேண்டும் — அப்படியா?"

"கோபிக்காதீர்கள்! டாக்டரிடம் எதையும் மறைக்க வேண்டாம். அந்த மாதிரி இல்லையென்ருல் உங்கள் மனைவிக்கு இப்படி ஒரு அதிர்ச்சி வருவானேன்?"

மெய்யாகவே டாக்டருக்கு அது புரியவில்லை! ''ஐஸ் வையுங்கள்; நாளை மறுபடி வருகிறேன்'' என்று சொல்லிவிட்டுச் சென்றார் அவர்.

லக்ஷ்மிக்கு இரவு முழுதும் ஜன்னியின் வேகம்; ஏதேதோ புலப்பம். 'மயானம்,' 'தீ,' 'அவரா'— இப்படி ஏதேதோ பிதற்றல்.

டாக்டர் காலையில் வந்தார். பரிசோதனைகள் நடத்தினார். ஒரு ஊசியைப் போட்டார். இரண்டு மாத்திரையைக் கொடுத்தார். போய் விட்டார். அவருக்கு வியாதி பிடிபடவேயில்லை.

அன்று திங்கட்கிழமை. நாடக விடுமுறை நாள். சூரி எங்கும் போகவில்லை. மனைவியின் அருகிலேயே இருந்தார். அன்று இரவும் முன்னைப் போலவே பன்னிரண்டு மணிக்குக் கண்ணை விழித்தாள் அவள்.

''அம்மா, அவர் எங்கே?'' என்று கேட்டாள்.

''இதோ இருக்கிறேனே பக்கத்தில்!'' என்றார் சூரி.

''எங்கே?''

சூரி அவள் எதிரில் வந்தார்.

''இங்குதான் இருக்கிறீர்களா? அப்பா...கண் குளிர எப்படி இருக்கிறது இப்பொழுது! உங்களைக் கொண்டு அந்த மாதிரி அலங்கோலத்தில் நிறுத்தினார்களே. ஐயோ! அதை நினைத்தாலே...''

லக்ஷ்மிக்கு மறுபடியும் மயக்கம் வந்துவிட்டது. டாக்டருக்கு ஆள் அனுப்பினார் சூரி.

''டாக்டர்! உங்களுடைய வைத்திய சாஸ்திரம் எல்லாம் இவ்வளவுதானா?'' என்று கேட்டார் சூரி.

''வைத்தியத்தைக் குறை சொல்லாதீர்கள். உலகில் எத்தனையோ விந்தைகளைச் செய்திருக்கிறது நவீன வைத்திய முறை. நம்முடைய நாட்டிலும் சித்த வைத்தியம் என்றும் ஆயூர்வேதம் என்றும் உண்டு; யூனானி முறையும் பிரசித்தமானதுதான். ஆனால், எந்த வைத்திய முறையிலும் மன நோய்க்கு மருந்து கிடையாது. யோசித்துப் பார்த்தால் மனம் என்பதும் ஒரு வகையான உடல்தான். அந்த நுட்பமான உடலுக்கு நாடி கிடையாது. அந்த நாடியைத் தெரிந்தவனும் வைத்திய உலகில் இல்லை. பாசம் என்பது இதயத்துக்கு இதயம் வேறுபடுகிறது. அதை எப்படி வகைப்படுத்தித் தெளிவது?''

கம்முகிற குரலில் சூரி மனைவிக்கு ஜுரம் வந்த வரலாற்றைக் கூறினார். நீண்ட நேரம் யோசித்துவிட்டு டாக்டர் பேசினார் :—

''சூரி, நீங்கள் நடிப்பதை விட்டுவிட வேண்டியது தான். நாடகம் என்று சொன்னதுமே ஏற்படுகிற இந்த அதிர்ச்சியை நீக்க வேறு வழியில்லை. நான் என்ன செய்யட்டும்? அளவு கடந்த அன்பு மனசைப் பஞ்சு போல் ஆக்கிவிடுகிறது. அந்தப் பஞ்சு பற்றி எரிவதற்கு சிறிய ஒரு தீப்பொறி போதும் அல்லவா! முதல் நாள் ஏற்பட்ட அனுபவம் அந்த மனசை அப்படிப் பாதித்து விட்டது. மனைவி வேண்டுமா செல்வம் வேண்டுமா என்பதை நீங்கள்தான் முடிவு கட்ட வேண்டும்.''

சூரி சொல்லுவார் : ''டாக்டர், செல்வத்தைப் பற்றி நான் கவலைப்படவில்லை. ஏதோ இதுவரை சேர்த்தது போதும். ஆனால் கீர்த்தி? உங்களுக்கு உலகம் நாடக மேடையாகத் தெரிகிறது. எனக்கோ நாடக மேடையே உலகமாகத் தெரிகிறது. கலைஞனுக்கு ஒரு

செருக்கு — மன்னிக்கக் கூடிய ஓர் ஆணவம் — உண்டு டாக்டர். அதுதான் அவனுடைய மூலதனம். கேவலம் பணமில்லை. புகழ் என்றும் சாதனை என்றும் நாடுகிற அந்த ஆணவத்திலேதான் அவனுடைய வெற்றியின் ரகசியம் அடங்கியிருக்கிறது.''

''என்ன செய்வது! உங்கள் வாழ்க்கையில் கலைஞனுடைய அத்தகைய ஆணவத்துக்கு இனி இடமில்லையே!''

# 4

சோக நடிகர் சூரி நாடகத்திலிருந்து விலகினார். நாடக முதலாளி கண்ணீர் வடித்தார். ரஸிகர்கள் கண்ணீர் வடித்தார்கள். உலகமே கண்ணீர் வடித்தது. ஆனால் அவருடைய மனைவி மட்டும் முகம் மலர்ந்தாள்!

''உலகமோ அவர் நடித்தபோதும் கண்ணீர் வடித்தது. நடிப்பை நிறுத்தியபோதும் கண்ணீர் வடித்தது. ஆனால், அவருடைய மனைவி அப்படியா?'' என்று கேட்டார் அந்த நேர் வகிடு நண்பர், கதையை முடித்துக்கொண்டே. இதுவரை அவருக்கு அருகே பெஞ்சின் கோடியில் மௌனமாக உட்கார்ந்திருந்த அவருடைய மனைவி இதைக் கேட்டதும் சிரித்தாள்.

''அவருடைய மரணத்துக்கு முன்பு நடந்த சம்பவம் என்றீர்களே. அவருடைய மரணத்தைப் பற்றி ஒன்றுமே சொல்லவில்லையே நீங்கள்!'' என்றார் அந்த அங்கவஸ்திர நண்பர்.

''சரிதான், இத்தனையும் அவருடைய மரணக் கதை தானே! சோக நடிகர் சூரி மடிந்து விட்டார். அதோடு அவருடைய மனைவியின் சோகமும் மடிந்து விட்டது.

இப்பொழுது உங்கள் எதிரே இருப்பவர் சோக நடிகர் சூரி இல்லை, வெறும் சூரிதான்!''

ரயில் நின்று பெருமூச்சு விட்டது. போய்ச் சேர வேண்டிய ஸ்டேஷனோ இல்லையோ, அங்கவஸ்திர நண்பர் வேகமாக இறங்கிவிட்டார்! ஒரு நிமிஷ நேரத்தில் அவரைத் தொடர்ந்து பெஞ்சே காலியாகிவிட்டது. சோக நடிகர் சூரியிடம் சற்று முன்பு வரை உலகத்துக்கு இருந்த அபாரமான அக்கறை அந்த ஒரு நிமிஷ நேரத்தில் அப்படியே மாயமாய் மறைந்து போய்விட்டது! சூரியே எதிரே உட்கார்ந்திருக்கும்போது, இனி அவரைப் பற்றி வம்பளக்க இடமில்லை அல்லவா!

# பளிங்குக் கனவு

“என்ன யோசிக்கிறாய் ஸர்தார்?” என்று மறுபடியும் கேட்டார் பாதுஷா ஷாஜஹான்.

“ஒன்றுமில்லை, ஸர்க்கார். உள் அறையில் பேகம் ஸாஹிபாவின் சமாதிக்கு மேலே வைத்துப் பதிக்க வேண்டிய கடைசிப் பளிங்குக் கல்தான் பாக்கி” என்று தயக்கத்துடன் வார்த்தைகளை ஒவ்வொன்றாகப் பதித்தான் ஸர்தார் ஷேர்கான். குதிரை வீரனுக்குச் சவுக்கைப் போல, பாதுஷாவுக்கு ஷேர்கான். ஆக்ராவின் தலைமை சேனாதிபதி அவன்.

“எந்தக் கல்லைச் சொல்லுகிறாய் ஸர்தார்?” என்று கேட்டார் பாதுஷா ஆவலோடு.

“பளிங்குக் கல் ஒன்றை இதயத்தின் வடிவத்தில் செதுக்கி அதில் நரம்புகள் ஓடுவது போலப் பச்சைக் கற்களையும், சிவப்புக் கற்களையும் பதிக்கவேண்டும் என்றீர்களே......”

“ஆமாம்; அதற்கா இத்தனை நாள் பிடிக்கிறது?” என்று கேட்டார் பாதுஷா.

இவ்வளவு பெரிய மஹாலை இத்தனை அழகாகச் செய்து முடித்த சிற்பிகளால், இந்த இதயத் துண்டு ஒன்றைச் செதுக்குவதற்கு ஏன் இவ்வளவு தாமதம் ஆக வேண்டும் என்று அவருக்குப் புரியவில்லை.

“பதினேழு வருஷங்கள் ஆகிவிட்டன. இன்னும் என் கனவு பூர்த்தியாகக் காணோமே!” என்று ஒரே கவலையோடு சொன்னார் பாதுஷா.

''இல்லே, ஸர்க்கார். எல்லாம் முடிந்துவிட்டதே, இந்த ஒரு சிறு வேலேதானே பாக்கி? இதையும் பாரஸீகத்திலிருந்து உஸ்தாத் ஈஸாவுடன் வந்திருக்கும் பிஜ்லீகானிடமே ஒப்படைத்திருக்கிறேன். முடிந்து விடும்......''

பாதுஷா பளிச்சென்று கேட்டார்: ''பிஜ்லீயா? அவன் ஒரு பெரிய சோம்பேறியல்லவா?''

''இல்லே, ஸர்க்கார்! இந்தத் தாஜ்மஹாலேக் கட்டுகிற பெரும் பணியில் பிஜ்லீகானின் உழைப்புத்தான் அற்புதமானது. ஐம்பத்தெட்டு அடி குறுக்கு விட்டமுள்ள உள் விதானம் முழுதும் அவனுடைய வேலேப்பாடுகள்தான். உஸ்தாத் ஈஸாவே அவனுடைய கலேத் திறமையைப் பிரமாதமாக மெச்சுகிருர்...'' என்று பெருமிதத்தோடு சொன்ஞன் ஷேர்கான்.

''ஆனல் முழுச் சோம்பேறி. அப்படித்தானே?''

''இல்லே ஸர்க்கார். இங்கே வேலே செய்யும் முப்பதிஞயிரம் சிற்பிகளிலும் பிஜ்லீகானுக்கு நிகர் யாருமே கிடையாது. ஆனல் சில சமயங்களில் பளிங்குக் கல்லுக்கு எதிரே இருந்து ஒரே சிந்தனேயில் ஆழ்ந்து விடுகிருன். இரவு கழிவதும் உதயம் ஆவதும் கூடத் தெரியாமல் பித்துப் பிடித்தாற்போல உட்கார்ந்து விடுகிருன். அவனேச் சுய நினேவுக்குக் கொண்டு வருவதே பெரும் பாடாகி விடுகிறது. பல இரவுகளில் பளிங்குக்கு முன்ஞல் ஒரே ஏக்கத்தோடு உட்கார்ந்து கண்ணீர் வடிப்பதைக் கூட நான் பார்த்திருக்கிறேன்'' என்று விவரமாகச் சொன்ஞன் ஸர்தார் ஷேர்கான்.

''ஆதாப் அரஸ்'' என்று சொல்லி வணங்கி அந்த நேரத்தில் மஜ்லீஸுக்குள் வந்தான் சிற்பத் தலேவன்

உஸ்தாத் ஈஸா. தாஜ்மஹலைக் கட்டுவதற்கு என்றே பாரஸீகத்திலிருந்து வந்திருக்கிற அதிசயத் திறமை வாய்ந்த அபூர்வ சிற்பி அவன். அவனோடு உதவிக்கு வந்தவன்தான் பிஜ்லீகான்.

''ஆதாப் உஸ்தாத்'' என்று அவனைப் பரிவோடு வரவேற்றார் பாதுஷா. முழங்காலை மண்டியிட்டு வணங்கிய உஸ்தாத் ஈஸா எழுந்து, ஸர்தார் ஷேர் கானுக்கு அருகில் ஒதுங்கி நின்றுகொண்டான்.

''என்ன உஸ்தாத், தாஜ்மஹல் பூர்த்தியாகி விட்டது என்றெண்ணி, அதைத் திறப்பதற்குக்கூட நாள் குறித்துவிட்டார் நமது அக்தர் ஷுமார். உம்முடைய பிஜ்லீகான்தான் திட்டத்தையெல்லாம் குலைத்து விடுவான் போலிருக்கிறது'' என்றார் பாதுஷா.

''ஸர்க்கார்! நாளைக் காலைக்குள் இதயப் பளிங்கு பூர்த்தியாகிவிடும். பிறகு அதைச் சமாதியிலே வைத்துப் பதிப்பதற்கு எவ்வளவு நேரம் ஆகிவிடப் போகிறது!''

''அது சரி; பொருத்துவது ஒன்றும் பிரமாதமில்லை. இதயம் தயாராக வேண்டுமே!'' என்று கேட்டார் பாதுஷா. அந்த வார்த்தைகளில் ஆற்ற முடியாத கவலை தொனித்தது.

''ஸர்க்கார்! பேகத்தின் நினைவுக்குத் தங்களுடைய இதயத்தின் கடைசிக் காணிக்கை மகத்தானது அல்லவா? அதனால்தான் கொஞ்சம் நாள் பிடிக்கிறது போலும்'' என்றான் உஸ்தாத்.

''நாளை மறுபடி வருகிறேன். அந்தச் சோம்பேறி மீண்டும் ஏதாவது சால்ஜாப்புச் சொன்னால் பிறகு

என்னையும் மீறிக் கோபக்காரன் ஆகிவிடுவேன்'' என்று கண்டிப்புடன் சொல்லிவிட்டு பாதுஷா நகர்ந்தார்.

''ஜீ ஸர்க்கார்'' என்று பணிவோடு ஸலாம் செய்தான் உஸ்தாத் ஈஸா.

## 2

''ஜீ ஸர்க்கார்'' என்று ஒப்புக்கொண்டு உறுதி சொன்னபோது, உஸ்தாத் ஈஸாவுக்கு எள்ளளவும் சந்தேகம் இருக்கவில்லை. ஆனால், மறுநாள் நடந்தது என்னவோ வேறு விதமாக இருந்தது. நடந்தது என்றால் நடக்காதது!

ஆமாம்; மறுநாள் ஒரு வேலையும் நடக்கவில்லை. பாதுஷா வந்தார். ஆவலோடு கேட்டார், ''இதயம் பூர்த்தியாகி விட்டதா?'' என்று.

''ஸர்க்கார்! மன்னிக்க வேண்டும். இன்று மாலைக்குள் நிச்சயம் முடிந்துவிடும். அது முடியும்வரை நானும் பிஜ்லீகானுக்கு எதிரிலேயே இருந்து கவனிக்கிறேன்'' என்றான் உஸ்தாத் ஈஸா.

பாதுஷாவின் முகத்தில் இருந்த துன்பக்குறி கோபமாக மாறியது. பக்கத்திலே நின்ற ஸர்தார் ஷேர்கானை ஒரு தரம் ஏற இறங்கப் பார்த்தார்.

''ஸர்தார்! அந்த பிஜ்லீகானைக் கொண்டு வாரும் இங்கே! மனைவியைப் பிரிந்து தவிக்கும் ஒரு கணவனுடைய இதயத்தின் ஆவலைக் கொஞ்சங்கூடப் புரிந்து கொள்ளாத வெறுங்கல்லா அவன்?''

இந்த வார்த்தைகளைச் சொல்லி முடித்ததுதான் தாமதம், யந்திரம் போலச் சுழல்கிற ஒரு சப்ராஸீ, விறு விறு என்று சென்று பிஜ்லீயை அப்படியே

அலக்காகக் கொண்டு வந்து பாதுஷாவின் முன்பு நிறுத்தினான்.

''இதயப் பளிங்கு எப்படி இருக்கிறது?'' என்று கேட்டார் பாதுஷா, உணர்ச்சிகளை அடக்கிக்கொண்டு.

பிஜ்லீகான் பதிலே பேசவில்லை.

''வேலை எந்த மட்டில் இருக்கிறது என்று கேட்டேன்!''—பாதுஷாவின் வார்த்தைகளில் சற்றுக் கடுமை உண்டாயிற்று.

அப்பொழுதும் பிஜ்லீகான் பேசவில்லை. உஸ்தாத் ஈஸா குறுக்கிட்டுச் சொன்னான்:

''பாதி வேலை ஆகிவிட்டது. இன்று பொழுது சாய்வதற்குள்......''

''பாதிதான் ஆகியிருக்கிறதா, பிஜ்லீ? உண்மையைச் சொல்'' என்று மறுபடியும் பிஜ்லீகானையே கேட்டார் பாதுஷா. கோபத்தினால் அவருடைய உடம்பு முழுதும் படபடத்தது.

''உண்மையைச் சொல்கிறேன். இன்னும் அந்த வேலையை நான் ஆரம்பிக்கவே இல்லை'' என்று ஏதோ ஒரு கனவு உலகிலிருந்து பேசுபவன்போலச் சொன்னான் பிஜ்லீகான்.

''ஆரம்பிக்கவே இல்லையா? பிஜ்லீ! என்னுடைய ஆசையும் ஆவலும் கொஞ்சமாவது உனக்குத் தெரிந்திருக்கிறதா? கல்லோடு பழகிப் பழகி நீயும் கல்லாகிவிட்டாயா?''

''ஸர்க்கார்! உணர்ச்சியற்ற கல்லுக்கு உணர்ச்சி கொடுக்க வேண்டியவன் நான். அதற்குத் தேவையான மனநிலை வரமாட்டேன் என்கிறது.''

இந்தப் பதில் வந்ததோ இல்லையோ, பாதுஷாவுக்குச் சினத்தினால் கண் சிவந்தது.

"மன நிலையா? வரமாட்டேன் என்கிறதா? அதை வரவழைக்கிறேன், பார்!" என்று சொல்லிக்கொண்டே, ஷேர்கானுடைய கையிலிருந்த சவுக்கைப் பிடுங்கினார் பாதுஷா. மறுகணம் 'பளார் பளார்' என்று சவுக்கின் நீண்ட வார், பிஜ்லீகானின் இடுப்பைச் சுற்றி நெளிந்தது. சுருண்டான்; சுருண்டு விழுந்தான். மின்னலைப்போலத் துடித்தான் பிஜ்லீ. அங்கு கூடியிருந்த அத்தனை பேரும், எதிர்பாராத இந்த சம்பவத்திலே சொல்லற்றுச் செயலற்று மரமாக நின்றார்கள்!

அடுத்த வினாடி ஒரே அங்கலாய்ப்போடு அந்த இடத்தைவிட்டு அகன்றார் பாதுஷா.

## 3

சூரியன் விடைபெறும் நேரம். மேற்கு வானத்தின் கடைசிக் கதிர்கள் யமுனை நதியிலே வீழ்ந்து, கரையிலே உள்ள பாதுஷாவின் கோட்டையை வளைத்துப் பிரதி பலித்துக்கொண்டிருந்தன. கோட்டைக்கு உள்ளேயோ?... பிஜ்லீகானின் இடுப்பிலே சுருண்ட சவுக்கு பாதுஷா ஷாஜஹானின் இதயத்திலே எத்தனையோ உணர்ச்சிகளைப் பிரதிபலித்துக் கொண்டிருந்தது. இந்த உலகத்தில் தன்னைத் தனியே தவிக்கவிட்டு மறைந்து போன மும்தாஜ் பேகத்தின் நினைவாக நிறுவப் போகும் அந்தப் பெரிய மஹலில், ஒரு மிகச் சிறிய பளிங்குத் துண்டுக்காக எவ்வளவு ஆத்திரமான நிகழ்ச்சி நடந்துவிட்டது! மனித இதயம் என்பது அவ்வளவு அரிய பொருளா! அதைக் கல்லினாற் செய்வதுகூட அவ்வளவு கஷ்டமா!—பாதுஷா ஒரே கலக்கத்தில் உட்கார்ந்திருந்தார்.

''ஸர்க்கார்'' என்று குரல் கேட்டது. உஸ்தாத் ஈஸா உள்ளே நுழைந்தான்.

''கல்லேச் செதுக்கியாயிற்று, திறப்பு வைபவத்துக்கு இனி ஒரு இடையூறும் இல்லே. இதைச் சொல்வதற்குத் தான் இப்பொழுது இங்கேயே நேரே வந்துவிட்டேன். மன்னிக்கவேண்டும்.''

''உஸ்தாத்! எப்பொழுதுமே வார்த்தையைவிடச் சவுக்குக்கு வலிமை அதிகந்தான்போலும்! ஆனாலும் அந்தச் சோம்பேறி பிஜ்லீ, நம் எல்லாருக்கும் எவ்வளவு மனக் கஷ்டத்தைத் தந்துவிட்டான்! அதை நினேத்தால் தான் வருத்தமாக இருக்கிறது. பரவாயில்லே, சென்று வாரும். உம்முடைய பரிவுக்கு மகிழ்ச்சி.''

உஸ்தாத்தை அனுப்பிவிட்டு, கோட்டையின் மாடிப் படிகளிலே ஏறிச் சயன அறைக்கு வந்தார் பாதுஷா.

''இதயப் பளிங்கைச் செதுக்கி ஆய்விட்டது என்ருன் உஸ்தாத் ஈஸா. அந்தக் கல் எப்படி இருக்கிறதோ? சவுக்கிஞல் அடித்த அடியில் அவசரம் அவசரமாக ஏதோ ஒப்பேற்றி விட்டானே பிஜ்லீ? இராது. அப்படி ஒப் பேற்றும்படி விடமாட்டாரே உஸ்தாத் ஈஸா! அல்லது, ஒருவேளே அவரும் சவுக்குக்குப் பயந்து போயிருந்தால்?''

இந்த மாதிரி யோசனேகளின் புகைக் குமைப்பில் மனம் கலங்கி, இரவு வெகு நேரம் வரை நிம்மதியே இல்லே. அறைக்கு வெளியே நிலா முற்றத்துக்கு வந்தார். எதிரே யமுனே நதி. வானத்திலிருந்து ஒரு பேரருவி போல் பொழிந்து கொண்டிருந்த நிலவில், நதியின் வெள்ளி மணற்பரப்பில் தன்னுடைய பளிங்குக் கனவு

வளர்ந்தோங்கி நின்றதை இமை கொட்டாமல் பார்த்தார் பாதுஷா. அடுத்த நிமிஷம் அந்த பிரும்மாண்டமான மஹலுக்குள் இருந்த சமாதி மனக் கண்முன் தெரிந்தது. அந்தச் சமாதியினுள் அமர நித்திரை செய்யும் தன் அருமை மனைவி எழுந்து வந்து, அந்த நிலா ஒளியில் தன் எதிரே நிற்பதுபோல ஒரு பிரமை. 'மும்தாஜ்' என்று தன்னையும் மறந்து பரிவோடு அழைத்தார். கண் கலங்கியது. அப்படியே சயன அறைக்குள் வந்தார். விரைவாக எதையோ தேடினார்.

ஆக்ரா நகரத்துக்குள் சில இரவுகளில் மும்தாஜ் பேகத்தின் யோசனைப்படி மாறு வேஷத்தில் பாதுஷா உளவு செல்வதுண்டு. அதற்குத் தேவையான தாடியும், ஒட்டுப் போட்டுத் தைத்த நீண்ட லுங்கிச் சட்டையும் மாடத்தினுள்ளே கவனிப்பில்லாமல் கிடந்தன. பாதுஷா அவற்றையெல்லாம் எடுத்தார். வெகு துரிதமாக அணிந்துகொண்டார். நிலைக் கண்ணாடிக்கு முன்னால் நின்று விளக்கைச் சற்றுத் தூண்டி விட்டுக் கொண்டு பார்த்தார்.

உண்மையில், அவருக்கே அவரை அடையாளம் தெரியவில்லை! மும்தாஜ் எவ்வளவு கெட்டிக்காரி! அவள் கைப்படவே தைத்துக் கொடுத்த அங்கி அல்லவா அது? தன் கணவனை இன்னொருவர் இனங் கண்டுவிடக்கூடாது என்பதில்தான் அவளுக்கு எத்தனை கவனம்!

பாதுஷா அதையெல்லாம் எண்ணி ஏக்கப் பெருமூச்சு விட்டுக்கொண்டே வெளியே வந்தார்.

## 4

'ஆக்ராவின் புதல்வி' என்று அழைக்கப்படும் யமுனையின் கரையில், நிலவு மங்கிக்கொண்டு வந்தது. விடிவதற்குச் சற்று முன்பு கவியுமே, ஒளிகலந்த ஒரு

இருட்டு, அந்த ஈரடியான நேரத்தில் யாரோ ஒரு நாடோடியைப்போல பாதுஷா ஷாஜஹான் நடந்து சென்றார். தாஜ்மஹலுக்குள்ளே இருக்கும் அந்த இதயக் கல்லைப் போய்ப் பார்த்து, சமாதிக்குள்ளே கண் அயரும் தம் மனைவிக்குத் திருப்தியாக இருக்குமா என்று தெரிந்து வந்துவிட வேண்டும் என்பதே அவர் ஆசை.

யமுனையின் கரையில் மரம் அடர்ந்த அந்தப் பிரதே சத்தில், சிறு சிறு சமாதிகளாக நின்ற பாழிடத்தில், அதோ ஒரு சின்னஞ் சிறு சமாதிக்கு முன்னால் யாரோ நிற்கிறானே? பாதுஷா சற்றுத் தயங்கினார். பிறகு ஏதோ யோசித்தவர் போல மேலே நடக்க ஆரம்பித்தார். என்ன விந்தை; அந்த இடத்தை நெருங்க நெருங்க அவருடைய உள்ளத்தில் திகைப்பு அதிகரித்தது. காரணம், அந்த மனிதன் வேறு யாருமில்லை, பிஜ்லீகான் தான்!

பாதுஷா, தமது திகைப்பையெல்லாம் அடக்கிக் கொண்டு, அவனிடம் மெதுவாகக் கேட்டார்: "பாயீ, முஸாபீர்கானா எங்கே இருக்கிறது?"

"முஸாபீர்கானாவா! நீங்கள் யார்? இந்த நேரத்தில் கேட்கிறீர்களே?" என்றான் பிஜ்லீ.

"பாயீ, தாஜ்மஹலின் திறப்பு விழா நடக்கப் போகிறது என்று கேள்விப்பட்டு, அந்த வைபவத்தைப் பார்க்க தில்லியிலிருந்து வருகிறேன். வழி தெரியாமல் இரவெல்லாம் எங்கெங்கோ சுற்றிவிட்டேன்" என்று பதில் சொன்னார் மாறு வேஷத்தில் இருந்த பாதுஷா.

"அதோ தெரிகிறதே, ஒரு பெரிய பளிங்குக் கட்டடம். அதற்குப் பக்கத்திலேயே இருக்கிறது முஸாபீர் கானா!"

"அந்தப் பளிங்குக் கட்டடம்?"

"அதுதான் தாஜ்மஹல். பாதுஷாக்களின் மனைவிமார்கள் இறந்து போனால், இப்படித்தான் பளிங்கு மஹல் நிற்கும்" என்று சொன்னான் பிஜ்லீகான். அவனுடைய குரல் ஏனோ கம்மிற்று. அவன் நின்றுகொண்டிருந்த அந்தப் பாழடைந்த சிறிய சமாதிக்கு மேலே சாய்ந்து, உணர்ச்சிகளை அடக்க முடியாமல் தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்துவிட்டான் பிஜ்லீ.

"பாயீ, ஏன் மனசை இப்படித் தளரவிடுகிறீர்கள்? என்ன குழந்தை-மனம் உங்களுக்கு!" என்று பரிவு கனியக் கேட்டார் பாதுஷா.

"குழந்தை மனமா? எனக்கா! நீங்கள் அப்படி நினைக்கிறீர்கள். ஆனால்......? கல்லோடு பழகிப் பழகி நானும் கல்லாகிவிட்டேன் என்றல்லவா பாதுஷா சொன்னார்? மனைவியைப் பிரிந்த ஒரு கணவனுடைய மனம் எனக்குப் புரியவில்லையாம்! உண்மைதானே!—இந்தப் பாழடைந்த சமாதிக்கு மேலே நான் ஒரு பளிங்கு மஹலா எழுப்பியிருக்கிறேன்?" என்று ஆத்திரத்தோடு கேட்டான் பிஜ்லீகான். மாறு வேஷத்தில் நின்ற பாதுஷாவின் உள்ளத்திலே சொல்ல முடியாத வேதனை தோன்றியது.

"பாயீ, அப்படியானால் இந்தச் சமாதிக்குள்ளே இருப்பது......"

"ஆமாம்; என் மனைவிதான். ஆக்ராவின் செம்மண்ணிலே வந்து சாவதற்கு என்றே என்னோடு பாரஸீகத்திலிருந்து வந்தாள் அவள்!"

அந்த வார்த்தைகள் ஆழமான வெள்ளத்திலிருந்து வரும் சுழிகளைப் போலச் சுழன்று வந்தன. தொண்டையை இருமிக்கொண்டு பிஜ்லீ சொன்னான்:

"போய் வாருங்கள், முஸாபீர்! என் கதை ஒரு சோக நாடகம். அதைக் கேளாதீர்கள். தாஜ்மஹலைக் கட்டுகிற ஒரு சிற்பியின் மனைவி, இந்தப் பாழடைந்த சமாதிக்குள்ளே வெய்யிலுக்கும் மழைக்கும் ஒதுங்கி மறைந்து கிடக்கிறாள் என்று எண்ணும்போது என்னால் தாங்க முடியவில்லை. பளிங்குக் கல்லுக்கு முன்னால் உட்காரும்போது, சில சமயங்களில் அதை நினைத்து விடுவேன். அவ்வளவுதான். வேலை ஓடாது. என் இதயத்தையே உளி கொண்டு செதுக்குவதுபோல இருக்கும்!"

மாறுவேஷத்தில் இருந்த பாதுஷா, அந்த நீண்ட லுங்கிச் சட்டையின் விளிம்புகளைக் கொண்டு பிஜ்லீ கானின் கண்களிலிருந்து பெருகி வரும் கண்ணீரைத் துடைத்தார்.

"சென்று வாருங்கள், முஸாபீர். உங்கள் இரக்கத்துக்கு அல்லாஹ் உங்களை ஆசீர்வதிப்பான்!"

## 5

பதினேழு ஆண்டுகளாகப் பளிங்குக் கல்லும், ஒரு கணவனுடைய இதயத்தில் பளிங்குக் காதலும் சேர்ந்து தவங் கிடந்து, சிற்பக் கனவாய் உருவாகி யமுனைக் கரையிலே நின்றது. அந்த வைபவத்தைக் கொண்டாடுவதற்கு என்று சிற்றரசர்கள், பேரரசர்கள், இனாம்தார்கள், பக்கீர்கள், மௌல்விகள், சிற்பிகள்—இப்படியாக ஒரே கூட்டம்.

ஒட்டகை பூட்டி ஆடி அசைந்து வரும் வண்டிகள், முகபடாம் போர்த்து அசைகின்ற மலையென நடந்துவரும் யானைகள், படபடவென்று நெரித்துக்கொண்டு ஓடும் துருக்கி நாட்டு ஜாதிக் குதிரைகள், சல்லாத் திரையிட்டுக் குலுங்கிக் குலுங்கிச் செல்லும் பல்லக்குகள்—இப்படியாக ஒரே ஊர்வலம்!

வாணங்கள் வானத்திலே சீறின! அதிர்வேட்டுக்கள் முழங்கின! ஷனுய் வாத்தியத்தின் ஒலி, சோகம் என்ற வர்ணத்தைக் குழைத்துத் தீட்டிய ஒரு நாத சித்திரமாகத் தாஜ்மஹல் முழுதும் வியாபித்து நின்றது!

ஷாஜஹான் சக்கரவர்த்தி ஆடம்பர ஆடைகள் ஏது மின்றித் தம் மனைவி கைப்படத் தைத்துக் கொடுத்த அந்த லுங்கிச் சட்டையை அணிந்துகொண்டு ஒரு பக்கீரைப்போல வந்தார். வலது காலை முன்னே வைத்து மஹலின் முகப்பில் நுழைந்ததும், மௌல்விகள் திருக் குர்ஆன் ஓதி அந்த வரவைப் புனிதப்படுத்தினார்கள். ராஜ வாத்தியங்கள் அந்த வருகைக்குக் கட்டியம் கூறின.

பளிங்கு ஓடைகளையும், அந்த ஓடைகளின் வழியாகத் தண்ணீர் பாய்ந்து வளர்க்கும் பூஞ்செடிகளையும் கடந்து உளப் படிகளிலே ஏறி, தாஜ்மஹலின் நெஞ்சகத்தில் உள்ள மனைவியின் சமாதி-அறைக்குள்ளே வந்தார், பக்கீர்களோடு பக்கீராக ஷாஜஹான்! சோகமயமான அந்தக் காட்சியிலே, ஷனுய் வாசித்துக் கொண்டிருந் தவன் மனம் உருகிப் போய்ப் பொங்கிவரும் துக்க வெள் ளத்தையெல்லாம் ஷனுய் வாத்தியத்தின் சிறு துவாரங் களின் வழியாக ஓடவிட்டான்.

சமாதிக்கு எதிரே அடுக்கு ரோஜா மலர்களைக் கொண்டு செய்து, உயர்ந்த பாரஸீகப் பன்னீர் தெளித்து வைக்கப்பட்டிருந்த பூச்செண்டை எடுத்தார் பாதுஷா.

மும்தாஜ் பேகத்தின் சமாதிக்கு மேலே, இதயத்தின் வடிவத்தில் பதிக்கப்பட்டிருந்த அந்த அற்புதமான பளிங்குக் கல்லிலே, மனிதர்களின் கடைசிக் காணிக்கை யாக வைக்க வேண்டிய அந்தப் பூச்செண்டை எதிர் பார்த்து மௌல்விகள் முன்னால் வந்தார்கள். அதை ஸமர்ப்பிக்க வேண்டிய பெருமை தங்களுடைய புனித மான கரங்களைத்தான் சாரும் என்று எண்ணிப் பாரஸீக நாட்டுப் பக்கீர்கள் ஆவலோடு நெருங்கினார்கள்.

''ஸர்தார்'' என்று கூப்பிட்டார் பாதுஷா. ''பிஜ்லீ கான் எங்கே?'' என்றார்.

மூடி விழிக்கும் நேரத்தில், கையும் காலும் விலங் கிடப்பட்ட பிஜ்லீகான் பாதுஷாவின் முன்பு கொண்டு வரப்பட்டான்.

''இதென்ன விலங்கு ஸர்தார்?'' என்று கேட்டார் பாதுஷா.

''ஸர்க்காரின் ஆக்ஞைக்குக் கட்டுப்படாமல் கால தாமதம் செய்து ஸர்க்காரின் அமைதியைக் குலைத்ததற் காகத் தண்டனை'' என்று சொன்னான் ஸர்தார் ஷேர்கான்.

''ஸர்தார், முதலில் இந்த விலங்குகளை அவிழும்!''

பிஜ்லீயினுடைய முகத்தில் குழப்பத்தின் குறிகள் மின்வெட்டுக்களாய்ப் பாய்ந்து கொண்டிருந்தன.

''பிஜ்லீ! இந்தா, ராணியின் சமாதியிலே முதலாவது பூச்செண்டை வைக்க வேண்டியவன் நீதான்.''

ஸர்தார், உஸ்தாத், மௌல்வி, பக்கீர்—எல்லாரும் திகைப்பிலே நின்றார்கள்!

பாதுஷா சொன்னார்:—"பிஜ்லீ, மனைவியை இழப்பது என்றால் அது என்ன என்பது உனக்குத்தான் தெரியும்."

இப்படிச் சொல்லிவிட்டு, பிஜ்லீகான் கண்களை அன்று இரவு துடைத்தாரே அதே லுங்கியின் விளிம்பினால், இப்பொழுது தமது கண்களையே துடைத்துக் கொண்டார் ஷாஜஹான்! ஆனாலும், அந்தத் துடைப்புக்கெல்லாம் அடங்காமல், பெருகிய துக்கத் துளிகள் பாரஸீகப் பன்னீரால் தெளிக்கப்பட்ட அந்தப் பூச் செண்டை நனைத்தன!

# சந்திர மண்டலத்து மனிதர்

பௌர்ணமிக்கும் மூளையின் நரம்புகளுக்கும் ஏதாவது ஒரு தொடர்பு இருக்குமோ என்று யோசித்தேன், முதலில். ஆங்கிலத்தில் பைத்தியக்காரர்களை 'சந்திர மண்டலத்து மனிதர்' என்கிறார்களே என்று நினைத்துப் பார்த்தேன். மதி என்றால் சந்திரன்; மதி என்றால் புத்தி. நிச்சயம் ஒரு சம்பந்தம் இருக்கிறது. அப்படியில்லாத பக்ஷம் இந்த மனிதன் ஏன் பௌர்ணமி தினம் பார்த்து இப்படி வரவேண்டும்?

கார்த்திகை மாதத்துப் பௌர்ணமி அன்றுதான் முதன் முதல் எங்கள் வீட்டுக்கு வந்தான் அவன். சாயந்திரம் ஆறு மணிக்கு நான் ஆபீஸிலிருந்து திரும்பிய போது என் மனைவியும் குழந்தைகளும் கையில் தடிக் கம்புடன் அவனை வெளியே துரத்த முயற்சித்துக் கொண்டிருந்தார்கள். அவன் நகருவதாகக் காணோம்!

இப்பொழுது நானும் சேர்ந்து கொண்டேன், அவனைத் துரத்துகிற முயற்சியில்.

என்ன ஆச்சரியம்! எத்தனை முறை விரட்டினாலும் அவன் எங்கள் வீட்டு முற்றத்தைவிட்டு நகர மறுத்தான். கோபத்தில் தடியால்கூட ஓங்கி அடித்துவிட்டேன். அந்த அடியின் வேதனை தாங்க மாட்டாமல் முற்றத்தை விட்டு வெளியே சென்றான். கதவைச் சாத்திவிட்டு உள்ளே வந்தால், பத்து நிமிஷத்துக்கெல்லாம் பழைய படி வாசலிலே நின்று தாழ்ப்பாளைக் கிலுக்கினான் அவன்!

அந்த மனிதன் ஒரு பைத்தியம்! பைத்தியம் என்ருல், வேட்டி சட்டையைக் கிழித்துக்கொண்டு அலைகிற கோட்டியில்லை. அழுக்கு உடுப்புத்தான்; ஆனு லும் ஒரு கால்ச்சராய். அதற்குமேல் ஒரு நீலச் சட்டை. சட்டைக்கு மேல் ஒரு உல்லன் மப்ளர். அந்த மப்ளருக்கு மேல் ஒபன் கோட்; அந்தக் கோட்டின் திறந்த காலரைப் பிரித்துக் கழுத்து வரை தூக்கிவிட்டு மூடியிருந்தான். தலையிலே ஒரு அழுக்குக் குல்லாய்!

இரவு முழுதும், நிலா வெளிச்சத்தில், கொட்டுகிற பனியில், கடிகார முள் மாதிரி மையமான ஏதோ ஒரு பாசத்தில் கட்டுண்டு எங்கள் வீட்டைச் சுற்றிச் சுற்றி வந்தான் அவன். விடியற்காலை கதவைத் திறந்து பார்த்தால் ஆளைக் காணவில்லை!

அடுத்த பௌர்ணமி வந்தது. வந்து விட்டான், மறுபடியும், அதே பைத்தியம்! இந்தத் தடவை கையில் ஒரு துருப்பிடித்த பழஞ்சாவி. வழியில் எங்கோ கிடந்து எடுத்திருக்கிருன். காம்பவுண்ட் கதவை அடைத்தால், அதில் ஒரு துவாரம் இருப்பதுபோல் பாவனை செய்து கொண்டு சாவியைக் கொடுத்துச் சுற்றுவான், அந்தச் சந்திர மண்டலத்து மனிதன்!

இந்தத் தடவை அவனைச் சற்றும் பொருட்படுத் தாமல் வீட்டிற்குள்ளேயே இருந்து விட்டோம்!

மூன்ருவது பௌர்ணமி வந்தது; பைத்தியமும் வந்துவிட்டான். ஆனல் இந்த முறை அவனை எப்படி யும் விரட்டிவிடுவது என்று தீர்மானித்தோம்.

அன்று சாயந்திரம், சூர்யநாத் சர்வகலாசாலை மனத் தத்துவப் பேராசிரியர் ராகவன் ஜட்கா வண்டியிலிருந்து எங்கள் வீட்டு முன்பு இறங்கியபோது, அவருடைய

வரவேற்பாளர்களான நாங்கள் அனைவரும், கையில் தடிக்கம்புகளுடன் பைத்தியத்தைத் துரத்துகிற காரியத்தில் மும்முரமாகி நின்று கொண்டிருந்தோம்!

"ஏது, வரவேற்பு பலமாக இருக்கிறதே!" என்று புன்சிரிப்புடன் கேட்டுக்கொண்டே உள்ளே நுழைந்தார் ராகவன்.

பெட்டி படுக்கைகளை உள்ளே கொண்டு வைக்கும்படி வண்டிக்காரனிடம் சொல்லிவிட்டு, ராகவனை வீட்டினுள் அழைத்தேன். அவரோ, நாங்கள் துரத்துவதைப் பைத்தியம் எப்படி எதிர்த்துச் சமாளிக்கிறான் என்பதிலேயே கவனமாக நின்றார்.

"சுந்தரம், நான் சொல்வதைக் கொஞ்சம் கேட்கிறீர்களா?" என்றார் பேராசிரியர்.

"சொல்லுங்கள். கேட்காவிட்டால், விட்டுவிடப் போகிறீர்களா!" என்றேன்.

"இவனைத் துரத்தாதீர்கள். உள்ளே அழைத்துச் செல்வோம்" என்றார் மனத்தத்துவ ஆசிரியர். பக்கத்தில் நின்ற என் அம்மாவுக்கோ கோபம் வந்தது!

"பைத்தியக்காரனை வீட்டுக்குள் அழைப்பதா?" என்றாள் அவள்.

"ஒரு பைத்தியத்துக்கு இடம் கொடுக்கிறீர்களல்லவா? இன்னொரு பைத்தியத்தையும் அனுமதித்து விடுங்களேன்" என்றார் ராகவன் சிரித்துக்கொண்டே.

பைத்தியத்தை வீட்டுக்குள் விட்டோம். ஆசிரியர் அவனுடைய கையைப் பிடித்துக்கொண்டார்!

"ஆசிரியர் அவர்களே! வீடு வாடகை வீடு. சுவரில் ஆணி அடிக்கவே சம்மதிக்கமாட்டார் செட்டியார். பைத்தியம் நுழைகிறது!" என்றேன்.

"கவலைப்படாதீர்கள் சுந்தரம்! எப்பொழுதுமே ஒரு பைத்தியத்துக்கு இன்னொரு பைத்தியத்தைச் சமாளிக்கத் தெரியும்!"

ஆசிரியர் எதைக்கொண்டு அப்படிச் சொன்னாரோ தெரியாது. உண்மையில், வீட்டுக்குள் நுழைந்ததும் பைத்தியம் ஒரே மௌனமாகிவிட்டது! கையைப் பிடித்திருந்த ஆசிரியரைக்கூட உதறிவிட்டு, அமைதியாக உள்ளே நடக்க ஆரம்பித்தது அது! அவ்வளவு தானா! வராந்தா, அதையடுத்துப் பட்டசாலை, தொட்டிக் கட்டு, சமையலறை—எல்லாவற்றையும் மிக மிகப் பழகின மனிதர் மாதிரிக் கடந்து சென்று புறவாசலுக்கு வந்தது பைத்தியம். அங்கே ஐந்து நிமிஷம் நின்றது.

திகைப்பும் ஆவலும் நிறைந்தவனாய், அந்தப் பைத்தியத்தையே கவனித்தேன் நான். அவனுடைய கண்கள் எங்கெங்கோ சுழன்றன. அந்த வீடு முழுவதையும் பின்வாசலில் நின்றவாறு அப்படியும் இப்படியும், மேலும் கீழும் மருண்டு பார்த்தான் அவன். அப்பொழுது அந்தக் கண்களைக் கவனித்தேன்;—மனத்தின் கோடியிலே எங்கோ அறுந்து போயிருந்த நினைவுச் சரட்டின் சிதறிய இழைகளை ஒன்று சேர்த்து முடிபோட முயற்சிப்பது போலச் சுழன்றது பார்வை! அடுத்த நிமிஷம் அவன் பின்வாசலைத் தாண்டிக் கிணற்றடிக்குச் சென்றான். ஆசிரியர் அவனுக்கு அருகிலும், நான் சற்று விலகியும் தொடர்ந்தோம்.

கிணற்றுக்கு அப்பால் தனியான ஒரு சிறு அறை; பழங்காலத்தில் யாரோ ஒரு வயதான மனிதர் அங்கு

இருந்ததற்கு அறிகுறியாக சிமெண்டினால் கட்டியிருந்த ஒரு சிறு திண்ணை. இப்பொழுது நாங்கள் அதில் கரி மூட்டை அடுக்கி வைத்திருக்கிறோம்!

பைத்தியம் அந்த அறைக்குள்ளே சென்று உள்ளே நூலாம்படை அடைந்த ஒரு சிறு அலமாரியைத் திறக்க முயற்சித்தது. அதைத் திறந்து வருஷக் கணக்காக ஆகியிருக்கும்! கொஞ்ச நேரம் கதவுகளோடு மல்லுக் கொடுத்த பிறகு, அலமாரி திறந்துகொண்டது. அதனுள் ஒரு ஓரத்திலிருந்த சிறு புகைப்படத்தை எடுத்துக் கண்ணுக்குப் பக்கமாக வைத்து வெகு நேரம் பார்த்தான், அந்தப் பைத்திய மனிதன்!

ஆசிரியரும் நானும் எட்டி நின்று அந்தப் படத்தையே கவனித்தோம். ஒரு வயதான கிழவரின் புகைப் படம் அது. பைத்தியத்தின் கண்களிலிருந்து பொங்கி வந்த கண்ணீர், சொட்டுச் சொட்டாக அந்தப் படத்தை நனைத்தது. விம்மி விம்மி அழுதான் அவன்!

இப்பொழுது மீண்டும் அந்தக் கண்களைப் பார்த்தேன். அவற்றின் ஆழத்திலே எங்கோ ஒரு கோடியில் கிடந்த நினைவின் ஒளி, நிலாக் கீற்றுப்போல் கருவட்டத்திலே மின்னலிட்டது! கரி மூட்டையைப் பார்த்துத் தலையில் அடித்துக்கொண்டே எங்கள் பக்கம் திரும்பினான் அந்த மனிதன்.

''ஸார், என்னை மன்னியுங்கள் ..'' — அப்படிச் சொன்னபோது அவனுடைய, இல்லை, அவருடைய குரலில் பெருந்தன்மை, வழி வழியாக வந்த ஒரு பண்பாடு, ஒலித்தது!

''வாருங்கள், மாடிக்குப் போகலாம்'' என்றேன் அவரைப் பார்த்து.

"மாடிக்கா? அந்த மேலோரத்து அறைக்குத்தானே? போவோம்; இன்று ஒரு நாளைக்கு அந்தப் பாக்கியம் எனக்குக் கொடுத்து வைத்திருக்கிறது. வாருங்கள்!" என்றார் அந்த மனிதர்.

அவரை அழைத்துக்கொண்டு ஆசிரியர் மாடிப்படிகளில் ஏறினார். நான் சமையலறைக்குச் சென்று காப்பி கொண்டு வரச் சொல்லிவிட்டு, அவர்களைப் பின் தொடர்ந்தேன்.

## 2

"சாப்பிடுங்கள்" என்றேன், அந்தப் புதிய மனிதரை.

"காப்பிதானே? அவசியம் சாப்பிடுகிறேன்!" என்றார்.

டம்ளரைக் கையில் வாங்கி ஒரே மடக்கில் அத்தனை காப்பியையும் சாப்பிட்டு விட்டு என்னைப் பார்த்தார்! ஆசிரியரோ ஒரே மௌனமாக இருந்தார்.

"காப்பி சாப்பிட்டு எத்தனை நாள் ஆகிவிட்டது! இன்னொரு டம்ளர் கொடுங்கள்."

ஆசிரியர் ராகவனும் நானும் ஒரே சமயத்தில் இரண்டு டம்ளரையும் நீட்டினோம். சிரித்துக் கொண்டே அந்த இரண்டு டம்ளர்களையும் தமது இரண்டு கையாலும் வாங்கிக்கொண்டார்!

"இந்த மாதிரிக் காப்பி சாப்பிட்டு எத்தனை வருஷம் ஆகிவிட்டது! உண்மையில், இந்தக் காப்பியின் வாசனை பல வருஷங்களுக்கு முன்பு இதே அறையில் நான் சாப்பிட்டுள்ள எத்தனையோ கப் காப்பிகளை நினைவுக்குக் கொண்டு வருகிறது!" என்று சொன்னார் அந்த மனிதர்.

சூடான காப்பியின் கொதிப்பில் உருகி வந்த அவருடைய நினைவுகளெல்லாம் வார்த்தைகளாக ஓடின.

"நீங்கள் இப்பொழுது வசிக்கிற இந்த வீடு உங்களுடையது இல்லை; தன்னுடையது என்று சொல்லிக் கொள்ளும் உங்கள் செட்டியாருடையதும் இல்லை. இது என்னுடைய வீடு!

"என்னுடைய வீடு என்றால், எனக்கு இப்பொழுது அநுபவ உரிமை உள்ள வீடு என்று அர்த்தம் இல்லை. ஒரு வீட்டை என்னுடையது என்று சொல்லிக்கொள்வதற்கு ரிஜிஸ்டர் பத்திரம் ஒன்றுதான் அவசியமா? அப்படிப் பார்த்தால் இது இன்று செட்டியாருடைய வீடுதான். அதே சமயம், அநுபவ பாத்தியதையைக் கொண்டு பார்த்தால் இது இன்று செட்டியாருடைய வீடும் இல்லை. உங்களுடைய வீடு! ஆனால் நான் சொல்வது என்னவென்றால், இந்த வீடு உங்கள் இருவருடைய வீடும் இல்லை. இது எங்கள் வீடு!

"இதோ இந்தச் சிறு புகைப்படம் எதுவரை இந்த வீட்டில் இருக்கிறதோ, அதுவரை இது எங்கள் வீடுதான்! நீங்கள் இந்த வீட்டில் குடியிருப்பதாகச் சொல்கிறீர்கள். ஆனால் இந்த வீடு என் உள்ளத்தில் குடியிருக்கிறது!"

புதிய மனிதர் இவ்வாறு உணர்ச்சிகளைக் கொட்டிக் கொண்டே சென்றார். சுவடு சில இடங்களில் மங்கியும் சில இடங்களில் மறைந்தும் போயிருந்த நினைவுப் பாதையிலே, தடம் கண்டு பிடித்து மேலே செல்வதற்காக அவர் வெகு நேரம் சுற்றிச் சுற்றி வந்தார். பிறகு சொல்ல ஆரம்பித்தார்:—

"இந்த வீடு எத்தனையோ தலை முறையாக எங்களுக்கு இருந்து வந்தது. பாட்டனார் காலம் வரை

நாங்கள் மிகவும் செயலாக இருந்த குடும்பம். பாட்டனுருக்கு என் தகப்பனுர் ஒரு ஆண் தவிர, ஐந்து பெண் குழந்தைகள்!

'அஞ்சு பெண் பெற்றுல் அரசனும் ஆண்டியாவான்' என்று கேள்விப்பட்டிருப்பீர்கள். பரம்பரைக் கௌரவத்தை விட்டுக் கொடுக்காமல் பெண்களைக் கட்டிக் கொடுப்பதற்குள் பூர்விகச் சொத்து எல்லாம் போய்விட்டது. கடைசியில் மிஞ்சியது இந்த வீடு ஒன்றுதான். இதிலும் என் தகப்பனுர் கல்யாணத்துக்காக அடமானம் வைத்து இரண்டாயிரம் ரூபாய் கடன்! இந்த நிலைமையில் கிணற்றடி அறையிலே சிமென்ட் திண்ணையில் படுத்துப் படுத்துப் பிராணனை விட்டார் பாட்டனுர். அவர் மடியும்போது, என் தகப்பனுரைக் கூப்பிட்டுச் சொன்னுர்: 'உனக்கு அதிகமாக ஒன்றும் நான் வைத்துப் போகவில்லை. இந்த வீடு, பூர்விக வீடு, இருக்கிறது. இரண்டாயிரம் ரூபாய் கடனும் இருக்கிறது. இதை இனித் திருப்ப என்னுல் முடியாது. உன் வாழ்க்கையில் இந்த வீட்டைக் கடனிலிருந்து மீட்டுவிட வேண்டியதே லக்ஷியமாக வைத்துக்கொள்.'

இந்த மாதிரிச் சொல்லிவிட்டுப் பாட்டனுர் உயிர் நீத்தார். தகப்பனுரோ ஸப் ரிஜிஸ்ட்ரார் ஆபீஸில் கிளார்க்காகச் சேர்ந்தார். அந்தப் புகழ்பெற்ற இலாகாவில் காலை எட்டு மணியிலிருந்து இரவு எட்டு மணி வரை, ஆள் காட்டி விரல் தேய எழுதி எழுதி, கிளார்க்காகச் சேர்ந்தவர் கிளார்க்காகவே பென்ஷனும் வாங்கினுர்! சம்பாதித்து மிச்சம் பண்ண முடியாததோடு போகவில்லை. இரண்டாயிரம் ரூபாய் கடன் எண்ணுயிரமாகப் பெருகி விட்டது! —என் தகப்பனுருக்கும் ஐந்து பெண்கள்!

செட்டியார் கோர்ட்டில் வியாஜ்யம் தொடுத்தார். எதிர்வாதம் செய்வதற்கு என்ன சட்டம் உண்டு? டிக்கிரி ஆயிற்று. வழிவழியாக நாங்கள் ஆண்டு அநுபவித்து வந்த வீட்டைக் காலி செய்ய வேண்டியது ஏற்பட்டது!

நண்பர்களே, இன்றும் என்னுல் மறக்க முடியவில்லே. வீட்டைக் காலி செய்து சாமான்களே அப்புறப்படுத்திக் கொண்டிருந்தோம். கிணற்றடி அறையிலே சிமென்ட் திண்ணேயில் சோர்ந்து படுத்திருந்த தகப்பனுரைக் கைத் தாங்கலாகப் பிடித்துக்கொண்டு வெளியே வந்தேன். அவருடைய மனசில் என்ன தோன்றியதோ, கால் தள்ளாடிக் கீழே விழுந்தார். உயிர் போய்விட்டது!

இதற்கெல்லாம் மேல் என்ன உண்டு? எல்லாம் முடிந்தது; என்ருலும் எத்தனேயோ தலேமுறையாக என் முன்னேர்கள் பிறந்து, வளர்ந்து, வாழ்ந்து, மடிந்த பூர்விகமான வீட்டை விட்டுக் கிளம்புகிறபோது என் மனம் ஒரு நிலேயில் இல்லே! தந்தையின் விருப்பம் பூர்த்தி யாக வில்லேயே என்ற ஏக்கம் வேறு! 'என் வாழ்க்கையில் இனிக் கல்யாணம் வேண்டாம், இகலோகத்து சுகங்கள் வேண்டாம், இந்தப் பூர்விக வீடு நமக்குத் திரும்புகிற வரை நான் மனிதன் இல்லே' என்றெல்லாம் உறுதிப் படுத்திக்கொண்டேன். ஆனுலும் அதுவரை தகப்பனுரின் ஆவி சாந்தியற்று வான வெளியிலேயே சுற்றித் திரிவதா? கூடாது என்று எண்ணினேன். அவருடைய இதயம் வாசம் செய்கிற இந்த வீட்டில், பிறருடைய கண்கள் பார்த்து ஏளனம் செய்யாத வகையில், கிணற்றடி அறையில் அந்த அலமாரியின் உள்ளே ஒரு ஓரத்தில் அவருடைய புகைப்படமாவது இருக்கட்டும் என்று நினேத்து, அதைப் பத்திரப்படுத்தி வைத்துவிட்டு வெளியே வந்தேன். அன்று பௌர்ணமி. நிலா வெளிச்

சத்தில் கிணற்றடியிலிருந்து சற்று நகர்ந்தேன். தலை சுற்றியது. கண் இருண்டது. அப்படியே கீழே விழுந்து விட்டேன்.

அதன் பிறகு என்ன நடந்தது என்று எனக்குத் தெரியாது. ஒருவேளை என்னைப் பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் சென்றிருப்பார்கள். அங்கிருந்து, இந்த நோய் குணத்துக்கு வராத நோய் என்று வெளியே அனுப்பியிருப்பார்கள். அல்லது என்னைக் கொன்று முடித்திருப்பார்கள்! இல்லை. அப்படியிராது! நான் மடிந்திருந்தால்தான் மோக்ஷம் என்ற வீட்டிலே என் தகப்பனுரைச் சந்தித்திருப்பேனே! இல்லை; இல்லை. அந்த வீடு எனக்கு எதற்கு? இந்த வீட்டிலேதான் அவரைச் சந்திக்க வேண்டும். ஆமாம்; சந்தித்துவிட்டேன்.

ஸார்...ஸார்... என்ன திகைக்கிறீர்கள்? நீங்களே சொல்லுங்கள். நான் மடிந்தே போனுலும் இது யாருடைய வீடு? சொல்லுங்கள் ஸார், இது யாருடைய வீடு?...''

இப்படிப் பேசிக்கொண்டே எழுந்தார் அந்த மனிதர். அவருடைய கண்களை அப்பொழுது பார்த்தேன்; நினைவின் ஒளி மறைந்துவிட்டது. விழியின் வட்டத்தில் விவரிக்க முடியாத ஒரு சூன்யம் படர்ந்திருந்தது. சிரித்தார், அழுதார்; மறுபடி சிரித்தார். வெறியின் வேகத்தில் அந்த இடத்தை விட்டுப் புறப்பட்டு விட்டார்.

''சுந்தரம், அவர் போகட்டும். ஜாக்கிரதையாக அவரை வெளியே கொண்டு சேர்த்துவிடுவோம்'' என்ருர் பேராசிரியர் ராகவன்.

திகைப்பு நீங்கி நாங்கள் எழுந்து போய் அவரைத் தொடர்வதற்குள் மாடிப் படிகளில் இறங்கி, முற்றத்தைத் தாண்டி வெளியே போய், திறந்த கதவை முன் போலச் சாத்திவிட்டு, வெகு விரைவாக மறைந்தார் அவர்!

மாடி அறைக்குத் திரும்பினேன். அவர் இருந்த இடத்திலே இப்பொழுது அவர் தகப்பனாரின் புகைப் படம் கீழே விழுந்து கிடந்தது!

சந்திர மண்டலத்து மனிதரின் நினைவாக இன்றும் அந்தப் படத்தை என்னுடைய அறையில் மாட்டியிருக்கிறேன். அவருடைய ஆசையைக் கௌரவப் படுத்தும் முறையில் வேறு ஒன்றும் என்னால் செய்ய முடியவில்லை!

# வள்ளியின் கணவன்

“ வள்ளி கணவன் பேரை
வழிப்போக்கர் சொன்னாலுமே
உள்ளம் குழையுதடி—கிளியே
ஊனும் உருகுதடி!” (கிளிவேல)

என்ற கிளிக்கண்ணியைக் கொண்டுவந்து கொடுத்த மாணவன், ‘க்’ என்னும் மெய்யெழுத்தைத் தெளிவு படுத்திக் கொள்ள விரும்பி, அது ‘வள்ளி கணவனா’ அல்லது ‘வள்ளிக் கணவனா’ என்று சந்தேகம் கேட்டான். அன்றைய வகுப்பில் வேற்றுமை உருபும், அது தொக்கி நிற்கிற இடங்களும் பற்றிய பாடம்!

தமிழ்ப் பண்டிதர் தருமலிங்கம் மாணவனுக்குப் பதில் சொல்லவில்லை. இடத்திலே போய் உட்காரும்படி சொல்லிவிட்டு, மனக்குதிரையின் வேகத்தை அடக்க முடியாமல் நினைவுலகிலே வட்டம் சுற்றினார்.

## 2

சரித்திர காலத்துப் பெண்ணரசியாக இருந்தால் அவளுடைய பெயரை வைத்துத்தான் வள்ளியூர் கிராமமே நிர்மாணம் ஆயிற்று என்று ஆராய்ச்சியாளர் முடிவு கட்டக்கூடும்! ஆனால் நம்முடைய வள்ளியோ இருப தாம் நூற்றாண்டுக் கன்னி. ஆனாலும் ஜாதகம் பொய்த்தா போய்விடும்! இந்த வள்ளி ஒருத்தி பிறக்கப் போகிறாள் என்பதற்காகவே அந்தக் கிராமம் ‘வள்ளியூர்’ என்ற பெயரைத் தனக்குச் சூட்டிக்கொண்டு காத்திருந்தது

என்று, தருமலிங்கம் பல முறை எண்ணி வியந்ததுண்டு. உண்மையில் வள்ளியூர் கிராமத்துக்கு இதயம் என்று ஒன்று இருந்தால், அந்த இதயத்தின் ராணி வள்ளிதான் என்று சொல்ல வேண்டும்!

வள்ளியூர் சுடலை முத்துத்தேவரின் மகள் என்று சொன்னால் யாருக்கும் தெரியாது. "தாழம்பூ வள்ளி" என்று சொன்னால்தான் தெரியும். இன்றைக்கும், இந்த ஐம்பது வயதிலும், அவளுடைய கொண்டையிலே தாழம்பூ இருந்துகொண்டு, வள்ளியூர்ப் பிரதேசத்தில் மட்டுமில்லை, கடல் கடந்த கொழும்புச் சீமைவரை அவளுடைய புகழின் மணத்தை அள்ளி வீசிக்கொண்டிருந்தது!

கொழும்புச் சீமை வரை என்றால் அது வீண்பேச்சு இல்லை. கொழும்பு நகரத்துக்கும் அவளுக்கும் ஒரு தொந்தம் இருந்தது என்ற விஷயம் அந்தக் கிராமத்தில் பலருக்குத் தெரியும். ஆனால் அதன் விவரம் மட்டும் ஒருவருக்கும் சரியாகத் தெரியாது.

சிலர் அவளுக்குக் கல்யாணம் ஆகியிருக்கிறது என்றும், அவள் புருஷன் கொழும்பில் இருக்கிறான் என்றும் சொன்னார்கள். வேறு சிலர் அவள் கழுத்தில் ஒரு நூல் - சரடுகூட இல்லாததால் அவள் கணவன் வெகு வெகு நாளைக்கு முன்பே காலமாகி விட்டான் என்று பேசிக் கொண்டார்கள். இன்னும் சிலரோ, வள்ளிக்கு ஒரு மன அதிர்ச்சி ஏற்பட்டு அது காரணமாக அறிவிருந்தும் ஒரு பித்துக்கொளிபோல இருக்கிறாள் என்று சொன்னார்கள். தமிழ்ப் பண்டிதர் தருமலிங்கமோ என்றால், அவளைப் பார்க்கும் போதெல்லாம் ஔவைப் பிராட்டியைத்தான் நினைத்துக்கொள்வார்!

அந்தக் காலத்தில், அதாவது சுமார் நாற்பது வருஷங்களுக்கு முன்பெல்லாம், சுடலை முத்துத் தேவருக்கு வள்ளியூர் கிராமப் பள்ளிக்கூடத்தில் 'வாட்ச்மன்' என்னும் ஆங்கிலப் பட்டம் பெற்ற காவலாளி உத்தியோகம். பகல் முழுதும் உறங்க முயற்சிப்பார். இரவு முழுதும் உறங்காமல் இருக்க முயற்சிப்பார். இந்த இரண்டு முயற்சிகளிலுமே அவருக்கு வெற்றிதான். ஆனால் ஒன்று: பகல் முயற்சிக்கு வெற்றி இரவிலும், இரவு முயற்சிக்கு வெற்றி பகலிலும் சித்திக்கும்!

அல்லும் பகலும் இவ்விதம் உழைத்துவந்த தேவருக்கு, 'ஒண்ணே ஒண்ணு, கண்ணே கண்ணு' என்று ஒரே மகள், அந்தத் தாயில்லாப் பெண் வள்ளி!

'கண்களை இமை காப்பதுபோல்' என்று உவமை சொல்வார்களே, அந்த முறையிலே, 'வாட்ச்மன்' சுடலை முத்துத் தேவர் தம்முடைய கண்மணி வள்ளியையும் கண் காணித்து வந்தார். அவளுக்குக் கல்யாண வயது வந்ததும், சரியான கணவன் எங்கிருக்கிறான் என்று, கண்ணும் கவனமுமாய்ப் பார்த்து வந்தார்.

சுடலை முத்துத் தேவருக்கு இந்தக் கலிகாலத்தின் 'பண மகாத்மியம்' நன்றாகத் தெரியும். "சேராதன உளவோ திருச் சேர்ந்தார்க்கு" என்ற பாடலைத் தமிழ்ப் பண்டிதர் கரும் பலகையிலே எழுதிப் போட்டிருந்ததை ஒரு நாள் இரவு பார்த்துவிட்டு, உடனே அதை அவர் மனப்பாடம் பண்ணிக் கொண்டார். அந்தப் பாடல் இந்த அகில உலகத்தையுமே அவருக்குக் கண் திறந்து காட்டியது மாதிரி ஒரு விழிப்பைக் கொடுத்தது.

வள்ளிக்குக் கணவனாக வருகிறவன் 'நாலு காசு' உள்ளவனாக இருக்கவேண்டும் என்று, தேவர் கண்ணாக

இருந்தார். இதையே திரும்பத் திரும்ப வள்ளியிடம் சொல்வார். 'வாய்ப்பேச்சின் எழிலைக் கண்டு மயங்கி விடக் கூடாது, பணம் என்ற ஒன்றினால் எல்லாமே சாதனை ஆகிறது' என்றெல்லாம் மேற்கோளுடன் எடுத்துக் கூறுவார். மெய்யாகவே தம்முடைய மகளை நல்ல நிலையில் வைத்துப் பார்க்கவேண்டும் என்று அவருக்கு ஆசை. ஆனால் பணம் உள்ளவன் இவரிடம் வந்து சம்பந்தம் செய்துகொள்வானா? வள்ளி அழகாகத்தான் இருந்தாள். சந்தேகமேயில்லை. நின்றெரியும் தீபச்சுடர் போல ஒரு வனப்பு. ''பச்சரிசி மாம்பழம்'' பழுத்து வரும்போது அதில் ஒரு கவர்ச்சிகரமான செக்கர் நிறம் படருமே, அதுபோல ஒரு குங்குமச் செந்நிறம், அவளுடைய கன்னங்களில் ஊடாடியது. இதெல்லாம் கவிஞர்கள் தங்கள் கவிதையிலே வர்ணிக்கலாம். ஆனால் அவளைப் பெண் கொள்கிறவன் அந்த வள்ளியூர் கிராமத்தில் இந்தக் காவிய எழிலைக் கண் திறந்து பார்க்கவேண்டுமே! அதை நினைத்தால் தேவருக்குக் கண் கலங்கியது. ஒரு நாள் பாவம், இந்த ஏக்கத்திலேயே கண்ணை மூடி விட்டார்.

ஆமாம்; சுடலை முத்துத் தேவரின் மரணம் ஒரு எதிர்பாராத அதிர்ச்சியாகவே இருந்தது. முந்திய இரவு பள்ளிக்கூடத்துக்குப் போனவர் மறுநாள் வீடு திரும்பாமல் இந்த உலகத்தை விட்டே போய்விட்டார் என்றால், யாரால் நம்ப முடியும்? அவருடைய சடலத்தைப் பார்த்தவர்களுக்குக்கூடத் தங்கள் கண்களை நம்ப முடியவில்லை. காரணம் முகத்தில் எள்ளளவு விகாரம் இல்லை. ஏதோ பாடலை முணு முணுத்தவாறு கண்களை மூடியது போல் இருந்தது அந்த முகம்.

வள்ளியின் துயரத்துக்கு ஒரு அளவே இல்லை. பருவம் என்ற கண்ணற்ற வனாந்தரத்தில், பூத்துக் குலுங்கி

நின்முள் அந்த வள்ளிக்கொடி, தாழம்பூவும் கொண் டையுமாக.

அதே சமயம், தேவர் வீட்டுத் தோட்டத்தில் வள்ளியைப் போன்றே செல்லமாக வளர்ந்த கறி வேப்பிலைக் கன்று ஒன்று இருந்தது. அது இப்பொழுது 'தளதள' வென்று பருவமாகிக் கம்மென்று வாசனை வீசிக்கொண்டிருந்தது. அதைக் கண்டு, வள்ளி தன் னுடைய ஜீவனத்துக்கு ஒரு வழி கண்டுபிடித்து விட்டாள்!

''கறிவேப்பிலை வாங்கலையா கறிவேப்பிலே எஎஎ...'' என்று வள்ளியூர் கிராமத்தின் அக்கிரகாரக் கோடியில் ஒரு மோகனக் குரல் கேட்கும். உடனே பெண்டுகள் எல்லாம் அரிசியும் சுளகும் கையில் ஏந்தி, வாசற்கடை யில் வந்து நின்று, ''ஏ, வள்ளி!'' என்று கூப்பிடு வார்கள். அந்த ஊரில் வள்ளியின் கறிவேப்பிலைக்கு ஒரு தனியான மணம் இருந்தது. ஆனல் அவளுடைய திருமணம்?

## 3

''ஏ, தாழம் பூ!'' என்று பிள்ளையார் கோவில் கிணற்றடியிலிருந்து யாரோ கூப்பிட்டார்கள். திரும்பிப் பரர்த்தாள் வள்ளி.

அரையிலே சாய வேட்டியும், தலையில் மேலப் பாளையம் துண்டை அலட்சியமாக ஒரு சுற்றுச் சுற்றி விட்ட தலைப்பாகையும், மார்பகலத்தை ஊடுருவிக் காட்டும் வெள்ளை மஸ்லின் சட்டையுமாக ஒரு இருபத் தைந்து வயதுச் சண்டியன் நின்றுகொண்டிருந்தான்,

அவனைப் பார்த்தும் பாராதது போலத் தலையைக் குனிந்துகொண்டு மேலே நடக்க ஆரம்பித்தாள் வள்ளி.

"ஏ புள்ளே! உன்னியேத்தானே! கூப்பிட்டா என்னமோ ரொம்பக் கிராக்கி நடை நடக்கியே!" என்றான் மிடுக்கோடு அந்த விடலை! வள்ளி நின்றாள். ஆனால் பேசவில்லை.

"தாழம்பூ எப்படியம்மா குடுக்கியாம்?" என்று குரலில் கொஞ்சம் இளக்கம் கொடுத்தான் அந்தக் கட்டு மஸ்தான காளை!

"இது தாழம்பூ இல்லையப்பா, கறிவேப்பிலை. அரிசிக்குத்தான் கொடுக்கிறது!" என்று சொல்லிக் கொண்டே, மேலே அடியெடுத்து வைத்தாள் வள்ளி. இதுவரை கிணற்று வளைவுச் சுவரின்மேல் குந்தியிருந்த வன், இப்பொழுது சட்டென்று தாவி அவளுக்கு எதிரில் வந்து நின்றுகொண்டான்!

"ஏம்மா, கறிவேப்பிலைக் கொழுந்து! காசுன்னா என்ன கசக்குதோ? இறக்கம்மா கொஞ்சம் கூடையை!" என்று சொல்லியவாறு, வள்ளியின் இடுப்பிலிருந்து தானே அந்தக் கூடையைச் செந்தூக்காகத் தூக்கிக் கீழே வைத்தான். வள்ளிக்கு இந்தப் புதிய அனுபவம் மனசையும் உடம்பையும் என்னவோ செய்தது. அவனோ இதற்குள் ஒரு கறிவேப்பிலைக் கொத்தை எடுத்து வாசனை பார்த்தான்!

"என்னா புள்ளே இது! இந்தக் கறிவேப்பிலை தாழம்பூ வாசனை அடிக்குது!" என்று குறும்புத்தனமாகச் சொல்லிக்கொண்டே, வள்ளியின் கொண்டையிலிருந்த தாழம்பூவை ஒருதரம் ஏற இறங்கப் பார்த்தான். அப்பொழுது வள்ளிக்கு ஏற்பட்டது கோபமில்லை. ஆத்திர மில்லை, சிரிப்பும் இல்லை. பின் என்னதான் அது?

## 4

கொழும்பு ஐந்தாம் குறுக்குத் தெரு நாலு மூனு சேயன்னு விலாசத்தில் 'நைட் வாட்ச்மன்' ஆறுமுகத் தேவன், மூர்த்தி சிறிதென்றாலும் கீர்த்தி பெரிது என்கிற கணக்கில், வயதில் இளைஞனேயானாலும், பெரிய பெரிய 'கோப்பன்'களையும் புரட்டி எடுத்துவிடக் கூடிய சாயவேட்டிச் சிங்கன்! இப்பொழுது ஒரு மாத விடு முறையில் தனது ஜன்ம பூமியான வள்ளியூருக்கு வந்திருக்கிறான்; இல்லை, விஜயம் செய்திருக்கிறான்! இந்த ஆனைப்பட்ட ஆறுமுகத்தின் முன்பு இப்பொழுது வள்ளி எதிர்ப்பட்டு விட்டாள்! பிறகு சொல்ல வேண்டுமா? அன்றிலிருந்து இந்த ஆறுமுகத் தேவனும், வேலன் வேடன் விருத்தன் என்று பல உருவங்களில், அவளை வளைய வளைய வர ஆரம்பித்து விட்டான்!

சுடலை முத்துத் தேவரின் மகளுக்கு அதிகமாக வார்த்தை வளர்ப்பதில் நம்பிக்கை கிடையாது. ஒரு நாள் சொன்னாள்:

"நாலு காசு சம்பாதிச்சுக்கிட்டு இந்த வள்ளியூர் மண்ணிலே வந்து மிதி. இதே பிள்ளையார் கோவில் முன்னாலே மேளந் தட்டிப் புடுவோம். என்னமோ பெரிசாக் காசுன்னாக் கசக்குதோன்னு அன்னிக்கு கேட்டியே!"

ஆறுமுகத் தேவன் விடுமுறைக்கு வந்தவன் மறுபடி கொழும்புக்குப் புறப்படும்பொழுது, ஒரு தீர்மானத் தோடுதான் கப்பல் ஏறினான். திரும்பினால் நாலு காசை அந்தச் சாய வேட்டியிலே கட்டிக்கொண்டு திரும்புவது: இல்லையென்றால் அந்தப் பெரிய கடல் இருக்கவே இருக்கிறது என்று, கச்சை கட்டிக் கொண்டுதான் கப்பலிலே உட்கார்ந்தான்!

## 5

மனக் குதிரையிலேறி, வள்ளியின் வாழ்க்கை நினைவுகளிலே சென்ற தமிழ்ப் பண்டிதர் தருமலிங்கம், இந்த இடத்தில் பெருமூச்சு விட்டுக்கொண்டார். காரணம், கப்பலேறிச் சென்ற ஆறுமுகம் பிறகு திரும்பிவரவே இல்லை.

வாழ்க்கை என்ற நெருடான செய்யுளை எத்தனையோ தடவைகள் நமது ஆசிரியர் அலகிட முயன்றதுண்டு. ஆனால் ஒவ்வொரு தடவையும் 'தளை தட்டுகிறதே' என்று உட்கார்ந்து விடுவார். அதிலும், வள்ளியின் வாழ்க்கை, அவர் பயின்றுள்ள அத்தனை இலக்கண விதிகளுக்கும் அடைபடாத புதுமைச் செய்யுளாக இருந்தது!

கன்னி வள்ளிக்கு இப்போது வயது ஐம்பது. குழி விழுந்த கண்கள். கன்னத்தில் சுருக்கங்கள். நெற்றியிலே கோடுகள். தாழம்பூச் சூடியிருந்தாலும் அந்தக் கேசம் பிச்சிப் பூவாக வெளிறியிருந்தது. ஆனாலுங்கூட அவளுடைய உள்ளத்தில் மட்டும் ஒரு மாறாத பசுமை, ஒரு தளராத நம்பிக்கை, காய்ந்துபோன கறிவேப்பிலைக்குள் ஒரு விவரிக்க முடியாத வாசனை இருப்பதுபோல!

தருமலிங்கம் எத்தனையோ தடவை வள்ளியைக் கூப்பிட்டுப் பேசியிருக்கிறார். அவளுடைய புருஷனைப் பற்றிக் கூட விசாரித்திருக்கிறார். அப்பொழுதெல்லாம் அவள் ஒரே பதிலைத்தான் சொல்லுவாள்:—

''நாலு காசு சம்பாதிக்கப் போயிருக்காரு. திரும்பி இதே பிள்ளையார் கோவிலுக்கு வருவாரு!''

இப்படி அவள் சொல்லும்போது, அவநம்பிக்கை என்பதே சற்றும் இல்லாத உறுதி அவளுடைய குரலிலே தொனிக்கும்! அது ஒரு குழந்தையின் பேதைமையை நினை

லூட்டும். உண்மையில் அது பேதைமையா, அல்லது வைராக்கியத்தில் ஏற்படும் பிடிவாதமா? அல்லது கபட மற்ற மனத்தின் அந்தரங்க சபலமா? இல்லை, அவளுடைய புத்தியிலேயே ஒருவகையான கோளாறு ஏற்பட்டு விட்டதா?—தருமலிங்கம் பன்னிப் பன்னி யோசிப்பார். ஆனால் தன்னுடைய நித்தியப்படியான காரியங்களில் வள்ளி சற்றும் பிசகாமல் நடந்துகொள்கிறாளே! கறி வேப்பிலை வியாபாரத்திலேதான் ஒரு சிறு இணுக்கு விட்டுக் கொடுத்துவிடுகிறாளா? கிடையாது! புத்தியெல் லாம் சரியாகத்தான் இருக்கிறது. அப்படியானால்?

யோசித்துக்கொண்டே யிருந்த தருமலிங்கத்தின் மனக்கண் முன்பு கொழும்பு நகரம் தெரிந்தது. அந்தப் பெரிய நகரத்தில் ஒரு பெரிய வீதி தெரிந்தது. அந்த வீதியில், ஒரு பெரிய கடைக்கு முன்னால், சாய வேட்டி கட்டிய வீரன் ஒருவன், 'நாலு காசு சம்பாதிக்கவேண்டும்' என்ற ஒரே தவயோகத்தில் இரவும் பகலும் விழித்த கண் மூடாமல், ஒற்றைக் காலில் நிற்பதுபோன்ற ஒரு காட்சி தெரிந்தது. மறுகணம், 'ஆண்களாவது இத்தனை தூரம் ஒரு மனப்பட்டு நிற்பதாவது' என்று எண்ணியவ ராய் மனப் பலகையில் தோன்றிய அந்தச் சித்திரத்தை அழித்து உதறுகிறதுபோல, 'டஸ்டரை' எடுத்து வேக மாக உதறினார். 'என்ன பொடி போட்டானோடி கிளியே' என்ற கண்ணியை வாய்க்குள்ளே சொல்லிக்கொண்டே, ஓடுகிற மனக்குதிரையின் கடிவாளத்தைப் பிடித்தார். அப்பொழுது அவருடைய சிந்தனையைக் கலைப்பதுபோல் தெரு வீதியிலே குரல் கேட்டது: ''கறிவேப்பிலை வாங்க லையோ, கறிவேப்பிலே எ எ எ......!'' அந்த 'லே'யில் விழுந்த இன்னிசை அளபெடை, பண்டிதர் அவர்களைப் பூரண நினைவுடன் பூமியின் மேலே தமது வகுப்பு அறையிலே கொண்டு வந்து நிறுத்தியது!

விழித்து எழுந்தவரைப்போல, ''அது வள்ளிக் கணவன் இல்லை; வள்ளி கணவன்தான்'' என்று தொக்கி நின்ற மெய்யைப் பையன்களுக்கு விளக்கினர் அவர்!

இந்த வள்ளி திருமணத்துக்கு, இந்த வள்ளியூர் விநாயகர் ஏன் இன்னும் உதவி செய்யாமல் இருக்கிறர் என்பது, தமிழ்ப்பண்டிதர் தருமலிங்கம் அவர்களுக்கும் ஒரு 'தொக்கி நிற்கும் மெய்'யாகவே நாளது தேதி வரை இருந்து வருகிறது!

# இரண்டு குயில்கள்

மகிழ மரத்திலிருந்து வாசனை வெகு சுகமாக வீசியது. குயில் சொல்லிற்று: 'உலகம் ஒரு இன்பப் பூஞ் சோலை!'

மாமரத்திலே தளிர் கோதிக் கொண்டிருந்த இணைக் குயில் நிமிர்ந்து பார்த்தது!

* * *

"நமது தினசரி வாழ்க்கையில் எத்தனையோ பேரைப் பார்க்கிறோம். எத்தனையோ பேருடன் பழகுகிறோம். இவர்கள் எல்லாரிலும் அதிக சந்தோஷமானவன் யார்?"

அகளங்கனுடைய அரச சபையிலே சற்று நேரம் மௌனம் நிலவியது. அரசனுடைய அந்தக் கேள்வி எல்லாரையும் கடும் யோசனையில் ஆழ்த்தியிருக்க வேண்டும்.

"நிகும்பா, உனக்குத் தெரிந்திருக்க வேண்டுமே; இந்தப் பரந்த தேசத்திலே நம் எல்லோரினும் ஒப்பற்ற இன்பசீலன், யார் சொல்?"

நிகும்பன் எழுந்து நின்றான். ஆனால் பதில் பேச வில்லை. பதிலும் தெரியவில்லை.

"நீலனுக்குக் கட்டாயம் தெரிந்திருக்குமே, ஏன், நீயும் பேசா திருக்கிறாய்?"

நீலன் நின்ருன். ஆனல் பதில் பேசவில்லை. பதிலும் தெரியவில்லை.

ஜீவகன், வீரநேயன், குணசீலன், சேனநாயகன், வேள்வி கர்த்தன்—ஒவ்வொருவராகக் கேட்டான். எல்லாரும் எழுந்து நின்ருர்கள். ஆனல் ஒருவரும் பதில் பேசவில்லை. ஒருவருக்கும் பதிலும் தெரியவில்லை.

மணிமுத்துப் புலவர்—அவருங்கூட எழுந்து நின்ருர். அவருக்குங்கூடப் பதில் தெரியவில்லை.

"மனித சமூகத்திலே மற்ற எல்லாரையும்விட அதிக இன்பம் கொண்டவன் யார்? அந்த ஒப்பற்ற இன்பசீலன் எங்கிருக்கிருன்?"

வினவுக்கு விடையில்லாமல் சபை கலைந்தது.

* * *

"நமது தினசரி வாழ்க்கையில் எத்தனையோ பேரைப் பார்க்கிருேம்; எத்தனையோ பேருடன் பழகுகிருேம். இவர்கள் எல்லாரிலும் அதிக துக்கமுள்ளவன் யார்?"

அகளங்கனுடைய சபையிலே சற்று நேரம் மௌனம் நிலவியது.

அரசனுடைய அந்தக் கேள்வி எல்லாரையும் கடும் யோசனையில் ஆழ்த்தியிருக்க வேண்டும்.

"நிகும்பா, உனக்குத் தெரிந்திருக்க வேண்டுமே. இந்தப் பரந்த தேசத்திலே நம் எல்லோரிலும் அதிக துக்கம் உள்ளவன் யார், சொல்."

நிகும்பன் எழுந்து நின்ருன். ஆனல் பதில் பேசவில்லை. பதிலும் தெரியவில்லை.

''நீலனுக்குத் தெரிந்திருக்க வேண்டுமே—ஏன் நீயும்.........''

நீலன் எழுந்து நின்றான். ஆனால் பதில் பேசவில்லை. பதிலும் தெரியவில்லை.

ஜீவகன், வீரநேயன், குணசீலன், சேனநாயகன், வேள்விகர்த்தன்—எல்லாரும்—எல்லாரும் எழுந்து நின்றார்கள். ஆனால் ஒருவரும் பதில் பேசவில்லை. ஒருவருக்கும் பதில் தெரியவில்லை.

மணிமுத்துப் புலவர்—அவருங்கூட எழுந்து நின்றார். அவரும் பதில் பேசவில்லை. அவருக்குங்கூடப் பதில் தெரியவில்லை.

''மனித சமூகத்தில் மற்ற எல்லாரிலும் அதிகத் துன்பம் கொண்ட மனிதன் யார்? அவன் எங்கிருக்கிறான்?"

வினவுக்கு விடையில்லாமல், சபை கலைந்தது.

* * *

நிகும்பன் புறப்பட்டான்.

''உலகத்தில் துன்பமே யில்லாதவனும் மற்ற எல்லாரிலும் அதிக இன்பம் உடையவனுமான மனிதன் யார்? அவன் எங்கிருக்கிறான்?''

நிகும்பன் புறப்பட்டான், அந்த ஒப்பற்ற இன்பசீலனைக் காணவேண்டும் என்று.

* * *

நீலன் புறப்பட்டான்.

''மனித சமூகத்திலே இன்பமே இல்லாதவனும் அதிகத் துன்பம் உடையவனும் ஆன மனிதன் யார்? அவன் எங்கிருக்கிறான்?''

நீலன் புறப்பட்டான், அந்தப் துன்ப மயமான துர்ப்பாக்கியசாலியைக் காணவேண்டும் என்று.

* * *

நிகும்பன் தேடினான்.

நாகஸ்வரத்தின் இன்னொலி எங்கு கேட்கிறதோ தெய்விக வீணையின் அரும் பண்ணொலி எங்கிருந்து வருகிறதோ, அபூர்வமான தீங்குரலிலே ரஞ்சகமான பாட்டொலி எங்கு இழைகிறதோ அங்கெல்லாம் சென்று தேடினான். ''மனித சமூகத்தில் ஒப்பற்ற அந்த இன்பசீலன் யார்? அவன் எங்கிருக்கிறான்?''

கல்யாண வீடுகள், காதலர் விடுதிகள், இனிய சோலைகள், இன்ப நிலவு; நதியின் கரை, கடல் மணற் பரப்பு; வீசும் தென்றல், வீங்கும் இளவேனில். ''அந்த ஒப்பற்ற இன்பசீலன் யார்? அவன் எங்கிருக்கிறான்?''

விழாக்கள், கொண்டாட்டங்கள், நாடகசாலைகள், மது அங்காடிகள், அரசரின் அந்தப்புரங்கள், கணிகையர் மாடங்கள். ''அவன் யார்? அந்த இன்பசீலன் எங்கிருக்கிறான்?''

* * *

நீலன் தேடினான்.

உற்றார் உறவினரின் உள்ளத்தையெல்லாம் ஒன்று சேர்த்துக் கூட்டி, சங்கிலே வைத்து ஊதி ஊதிக் குமைகிறானே, அந்த ஏக்கச் சங்கொலி எங்கிருந்து வருகிறதோ, உயிரை வார்த்தையிலே கரைத்துக் கரைத்து நலியவிடும் ஒப்பாரி எங்கு ஒலிக்கிறதோ, அடைத்துக் கிடந்த உள்ளத்திலிருந்து இறந்த காலத்து நினைவையெல்லாம் ஏக்கத்தோடு திறந்துவிடும் பெருமூச்சு

எங்கிருந்து கிளம்புகிறதோ—அங்கெல்லாம் சென்று தேடினன் நீலன். "உலகத்தில் மற்ற எல்லாரையும்விட அதிகத் துன்பம் கொண்ட மனிதன் யார்? அவன் எங்கிருக்கிருன்?"

பொறிக்கும் வெயில்; கனல் விடும் பாலேவனம்; திக்குத் திசையற்ற கருங்காடு; கொடும்புலியோடு கடும் சிங்கம் சுற்றித் திரியும் மலேப் பிராந்தியம்—எல்லாம் தேடினன், "அந்த துர்ப்பாக்கியசாலி எங்கிருக்கிருன்?" என்று.

கொலேக்களம், போர்க்களம், சுடுகாடு, இடுகாடு, தூக்குமேடை, சிறைச்சாலே—"அந்த துர்ப்பாக்கியசாலி எங்கே?"

உயிரைக் கையிலே தாங்கிக்கொண்டு, நின்று நின்று மறுகுகிருனே, குற்றவாளி, அந்தக் கைதிக் கூண்டிலே தேடினன். உண்மையைச் சொல்லவில்லே என்று, சத்தியத்தின் பெயரால் சித்திரவதை செய்தார்களே காவல் நிலேயம்—அங்கே தேடினன், அந்த் துர்ப்பாக்கிய சாலியை. இன்னும் ஜீவாந்திர சிக்ஷை 'அருளு'கிற தீவுகள் உண்டே, அங்குகூடச் சென்று தேடினன் நீலன்.

"மற்ற எல்லாரையும்விட அதிகத் துக்கம் கொண்ட துர்ப்பாக்கியசாலி எங்கிருக்கிருன்?"

* * *

வசந்த காலம் பூநகை சூடிப் புன்னகையாட நடினமிட்டது. முது வேனில் தழைத்த மரங்களேப் படவைத்துச் சென்றது. கார் வந்தது. தூய்மையான நீல்வானத்திலே கார் மேகங்கள் கவிந்து மழையைக் கொட்டின. பட்டமரம் துளிர்த்தது. கார்த்திகை

பூமியிலே எறிந்து விடுவதாக முரசடித்தது. தை வந்தது; சூரியனின் புரவி, வானப்பாதையிலே வட்டமிட்டுத் திரும்பியது. மாசி வந்து பனி நீர் சிதறியது. பங்குனி வந்தது. புல் நுனியைக் கண் துடைத்தது. சூரியன் உதித்தான். உலகம் புன்னகை புரிந்தது.

சக்கரம் ஒரு முறை சுழன்றுவிட்டது.

'வேனில்'—இளவேனில் வந்தது.

புஷ்பங்கள் மலர்ந்து, சோலையின் வாசனை உயிரைக் கவ்வி இழுத்தது.

வீணையின் மாடகத்தை முறுக்கி விட்டுக்கொண்டு மலயமாருதத்தைத் தொடர்ந்தான் அகளங்கன். வேனிற் காலத்தின் சொகுசு அவனுடைய விரல்களிலே பின்னி விளையாடியது. நினைத்தறியாத கமகங்கள் எல்லாம் அனுயாசமாகப் பேசின.

"உலகந்தான் என்ன இன்பகரமானது!"

"வசந்தம் எவ்வளவு சுகமானது!"

"வீணை தான் எத்துணை ரம்யமானது!"

மாறி மாறி அகளங்கனும் சாரநாயகியும் வியந்து கொண்டே போனார்கள்.

* * *

வானத்தை மேகங்கள் மூடிக்கொண்டு அடை மழை பொழிந்தது. மின்னல்கள் கண்ணைப் பறித்தன. இரவும் பகலும் அந்தகாரம் நிறைந்து கொண்டு விண்ணையும் மண்ணையும் பிரளயாகாரமாகச் செய்தது.

அகளங்கனுடைய வீணையிலே வராளி, சோக ரசத்தின் எல்லையைத் தொட்டு நின்று பேசியது.

கார் காலம் சென்றது. முன்பனி, பின்பனி, மீண்டும் வசந்தம்.

அகளங்கனுடைய வீணையில் அதிசயமான கமகங்கள் உதிர்ந்தன.

''யாரங்கே?''

அணிமாடத்தில் தொங்கிக் கொண்டிருந்த சல்லாத் திரையை யாரோ நகர்த்தினர்கள்.

''யாரங்கே?''

''நான்தான்.''

வீணையைக் கீழே வைத்து விட்டு எழுந்தான் அகளங்கன்.

''யார்? நிகும்பன் அல்லவா?''

ஆம். நிகும்பன்தான். பாவம், அலைந்து திரிந்து உடம்பு துரும்பாகிவிட்டது. ஆனல், அவனுடைய கண்களில் என்ன, அசாதாரணமான ஒரு தீக்ஷண்யம்!

''அகளங்க சக்கரவர்த்தி, முதலில் என்னைப் பாராட்டுங்கள்.''

''உன்னை எப்பொழுது பாராட்டப் போகிறேம் என்றல்லவா காத்துக் கொண்டிருக்கிறேன்.—நிகும்பா, யார் சொல், இந்த உலகத்தில் நாம் பொருமைப்பட வேண்டிய இன்பசீலன் யார்? அவன் எங்கிருக்கிறன்?''

''சக்கரவர்த்தி! கோமுகி நதி தீரத்தில் வசந்த காலத்து எழில் பிரவாகத்தின் அமைதியிலே சுரந்து கொண்டிருந்தது. ஒளி மயமான நீலவானத்தையும்,

செல்லும் நீரின் பரப்பையும் நோக்கியவாறு நின்று கொண்டிருந்தான் ஒருவன். அவனை அணுகி நோக்கினேன்.

"என்ன ஆச்சர்யம்! அந்த அபூர்வனிடத்திலே இன்பத்தின் கோடி எல்லையைக் கண்டேன். அவன் கையிலே தொங்கிக் கொண்டிருந்த கூண்டிலிருந்து குயில் கூவிற்று. அந்தக் குரலிலே இந்தப் பரந்த உலகிலுள்ள அத்தனை இதயங்களின் இன்பமும் ஒன்று சேர்ந்து ஒலித்தது."

* * *

மழை, இடி, மின்னல், காரிருள். வையத்தையும் ஆகாசத்தையும், ஒன்று சேர்த்து நீர்ப்படலம் போர்த்து நின்றது.

அகளங்கனுடைய வீணையிலே வராளி சோக ரசத்தை வார்த்து வடித்தது.

"யாரங்கே?"

அணிமாடத்தின் சல்லாத் திரையை யாரோ நகர்த்தினார்கள்.

"யாரது?"

"நான்தான்."

வீணையைக் கீழே வைத்துவிட்டு எழுந்தான் அகளங்கன்.

"யாரது—நீலன் அல்லவா?"

ஆம் நீலன் தான். பாவம் அலைந்து திரிந்து உடம்பு துரும்பாய்விட்டது.

"... சக்ரவர்த்தி என்னைப் பாராட்டுங்கள்!"

"நீலா, உன்னை எப்பொழுது பாராட்டப் போகிறோம் என்றல்லவா தவித்துக் கொண்டிருக்கிறேன். யார், சொல்; மனித சமூகத்தில் மற்ற எல்லாரையும்விட அதிகத் துன்பம் கொண்டவன் யார்? அந்த துர்ப்பாக்கிய சாலி எங்கிருக்கிறான்?"

"சக்கரவர்த்தி, கோமுகி நதி தீரத்தில் கார் காலத்தின் ஆவேசம் பிரவாகத்திலே பொங்கிப் பாய்ந்து கொண்டிருந்தது. இருள் மயமான கருவானத்தையும் அதை முட்டி மோதுவதற்காக அலறிக்கொண்டு செல்லும் நீரின் பரப்பையும் நோக்கியவாறு நின்று கொண்டிருந்தான் ஒருவன். அவனை அணுகி நோக்கினேன். என்ன பரிதாபம்! துன்பத்தினுடைய கோடி எல்லையை அவனிடத்தில் கண்டேன். அவன் கையிலே தொங்கிக்கொண்டிருந்த கூண்டிலிருந்து ஒரு குயில் கூவிற்று. அந்தக் குரலிலே இந்தப் பரந்த உலகத்திலுள்ள அத்தனை இதயங்களின் துன்பமும் ஒன்று சேர்ந்து ஒலித்தது!"

நிதும்பன், நீலன்—இருவரும் ஒரே மனிதனைத்தான் இவ்வாறு குறிப்பிடுகிறார்களா? அகளங்கனுக்குத் தலை சுழன்றது!

* * *

மகிழ மரத்திலிருந்து வாசனை வெகுசுகமாக வந்தது. குயில் சொல்லிற்று, 'உலகம் ஒரு இன்பப் பூஞ்சோலை.'

மா மரத்திலே தளிர் கோதிக் கொண்டிருந்த குயில் நிமிர்ந்து பார்த்துவிட்டுக் கேள்விக் குறியைப் போல ஒரு வளைவு வளைந்து நின்றது!

# ஸத்யமேவ ஜயதே

"டடால்" என்று சத்தம் கேட்டது. சரோஜா பதறியடித்து ஓடிப்போய்ப் பார்த்தாள். அலமாரியில் வைத்திருந்த பெரிய நெய் ஜாடி கீழே விழுந்து உடைந்து கிடந்தது. சரோஜாவின் அம்மா நெய்யை எடுக்கும் போது கை நழுவிக் கீழே விழுந்துவிட்டது.

அந்த ஜாடி சரோஜாவின் அப்பா தில்லியிலிருந்து வெகு சிரமப்பட்டு வாங்கி வந்தது.

சரோஜா அலமாரிக்குப் பக்கத்தில் போய் நின்று கொண்டு பார்த்தாள். அம்மா கைப்பிடித் துணியை வைத்துத் தரையைத் துடைத்துக்கொண்டிருந்தாள். அரைப்படி நெய் இருக்கும். அவ்வளவும் கீழே சிந்தி யிருந்தது!

"என்னம்மா இது, எவ்வளவு நெய்" என்று சரோஜா குழப்பமாகக் கேட்டாள்.

"சரி, சரி, நீ ஒருத்தி அனுதாபப் படுறதுக்கு இல்லே யேன்னுதான் குறைபட்டேன்" என்றாள் அம்மா வெடுக்கென!

அம்மா முகத்தில் இருப்புச் சட்டியிலே காய்கிற வெண்ணெய் போல 'சடசட' என்று கோபம் பொரிந்து கொண்டிருந்தது!

"என்னம்மா, இப்படிக் கோபப்படுறே? நீதானே அன்னிக்கு ஒரு கரண்டி நெய் அதிகமாக் கேட்டதுக்கு

கோபிச்சே என்னை—நெய் விற்கிற விலையிலே கூடயும் ஆச்சு, முறமும் ஆச்சுன்னு''

''சரி சரி, எனக்குத் தெரியும். நீ போ பெரிய மனுஷி.''

'இல்லேம்மா...நான்—வந்து...''

'இந்தா சரோஜா, நீ பேசாமப் போறியா இல்லையா?''

''அம்மா, நான் அப்பாகிட்டச் சொல்லிடுவேன்னு தானே பயப்படுறே அம்மா?''

''சொல்லுவே. சொன்னே, அவ்வளவுதான். அப்புறம் பாரு உன்னை என்ன செய்யறேன்னு.''

''இல்லேம்மா, நான் சொல்லவே மாட்டேனம்மா. கோபிக்காதேம்மா, சத்தியமா நான் அப்பாகிட்டேச் சொல்லமாட்டேன் அம்மா...''

சரோஜாவின் அம்மாவுக்குக் கோபம் தணிந்தது. சத்தியத்துக்கு எவ்வளவு மதிப்பு இருக்கிறது என்று சரோஜாவுக்கு அப்பொழுதுதான் மிக நன்முய்ப் புரிந்தது. அந்த ஒரு வார்த்தை எவ்வளவு எளிதாக அம்மாவினுடைய கோபத்தை விரட்டி விட்டது என்று சந்தோஷப்பட்டாள் சரோஜா!

அன்று சாயந்திரம் சரோஜாவின் அப்பா ஆபீஸிலிருந்து வந்ததும், என்னவோ வாசனை பார்க்கிறது மாதிரி மூக்கை இழுத்து இழுத்து சுவாசித்துக்கொண்டே வந்தார்.

''இதென்ன...ஓ! நெய்யா, சரி சரி—நெய் விற்கிற விலையிலே...'' என்று ஆரம்பித்தார் அப்பா.

''நான் ஒண்ணும் கொட்டலே, நம்ம வீட்டிலே வளர்கிறதே ஒரு செல்லப் பூனே, அதுதான்...'' என்று அம்மா வார்த்தையை இழுத்தாள்.

''ஓகோ, ஜாடியுமே போயிட்டுதா, ரொம்ப சரி'' என்று சொல்லிக்கொண்டே உடைந்து போன துண்டுகளைப் பார்த்தார்.

''ஒரு தாவிலே தாவி நெய்யையும் கொட்டி, ஜாடியையும் உடைச்சுட்டு காத்தாப் பறந்துட்டுதே'' என்று அம்மா சொன்னுள், ஒரே ஆச்சரியத்தில் மூழ்கிப் போனவள் போல!

சரோஜாவின் அப்பாவுக்கு ஆத்திரம் வந்தது அந்த நிமிஷத்தில் பூனேமட்டும் அகப்பட்டிருந்தால் அவ்வளவு தான். பொதுவாகவே அஹிம்சையில் அவருக்கு அவ்வளவாக நம்பிக்கை கிடையாது!

அம்மா சொன்னதையெல்லாம் சரோஜா கேட்டுக் கொண்டுதான் இருந்தாள். ஆனுலும் நடந்த விஷயத்தை அப்பாவிடம் சொல்லவில்லே; அம்மாவுக்கு சத்தியம் அல்லவா செய்து கொடுத்திருக்கிருள்.

இந்தக் குழப்பம் எல்லாம் நடந்து அரை மணி நேரம் கழித்து அவர்கள் வீட்டிலே வளருகிற அந்தக்கருப்புப் பூனே வந்தது. வந்தால் என்ன? கோபத்தில் அந்த மாதிரி ஒரு காரியம் அப்பா செய்வார் என்று சரோஜா எதிர் பார்த்தாளா? இல்லே. என்ன செய்தார் அவர்? அந்தப் பூனேயைப் பிடித்து ஒரு சாக்குக்குள்ளே போட்டுக் கட்டி எங்கேயோ ஊருக்கு வெளியே கொண்டுபோய் விரட்டி வந்துவிட்டார்!

சரோஜாவுக்கு மிகவும் கஷ்டமாக இருந்தது. அதைத் தூக்கிப் போடும்போது அந்தச் சாக்குக்குள்ளே இருந்து கேட்ட பூனையின் பரிதாபக் கூச்சல் சரோஜாவின் காதில் கேட்டுக்கொண்டே இருந்தது!

## 2

அன்று இரவு அவள் சரியாகச் சாப்பிடவில்லை. கருப்புப் பூனையிடம் சரோஜாவுக்கு அபாரமான பிரியம் உண்டு. பாவம், அது என்ன செய்தது? ஜாடியைக் கீழே தள்ளினது அம்மா அல்லவா. அப்பாவோ என்றால் இந்தப் பூனையைக் கொண்டுபோய் எங்கோ கண் தெரியாத இடத்தில் விட்டு விட்டாரே. சரோஜாவுக்கு அப்பாவின் பேரில் கோபம் கோபமாக வந்தது. ஆனாலும் அப்பாவையுந்தான் சொல்ல என்ன குற்றம்? நெய் ஜாடியைக் கீழே தள்ளியது பூனைதான் என்று அவர் உண்மையிலேயே நம்பினார். அம்மாதானே பொய் சொன்னாள்? ஆனால் பாவம், அம்மா ஏன் பொய் சொன்னாள்? அப்பா கோபத்துக்குப் பயந்துதானே. அவள் மேலேயும் குற்றமில்லை. என் மேலேதான் குற்றம். நான் ஏன் அப்பாவிடம் நிஜத்தைச் சொல்லவில்லை?'' என்று சரோஜாவின் குழந்தை உள்ளம் துடித்தது.

சரோஜா படுக்கையில் புரண்டுகொண்டே தன்னுடைய பசலை அறிவுக்கு எட்டியபடியெல்லாம் யோசனை செய்தாள்:—''இப்படியே போய் அப்பாகிட்டே நிஜத்தைச் சொல்லிட்டா என்ன? ஆனா சத்தியம் பண்ணிக் கொடுத்திருக்கோமே அம்மாகிட்டே, சத்தியம்...சத்தியமு மாச்சு சக்கரைப் பொங்கலுமாச்சு. பேசாமே தைரியமா அப்பாகிட்டே போயி சொல்லிடத்தான் போறேன். ஆனா அப்பா பூனையைக் கொண்டுபோய் வெளியே விட்டு

விட்ட மாதிரி அம்மாவையும் கொண்டுபோய் வெளியே விட்டுட்டு வந்திட்டா...?''

சரோஜாவுக்கு அந்த எண்ணத்தையே தாங்க முடியவில்லை. அந்த இரவு முழுதும் அவளால் உறங்கவே முடியவில்லை. எப்போது விடியும், எப்போது இந்தக் கோபக்கார அப்பாவையும், பொய் சொன்ன அம்மாவையும் மறந்து கொஞ்ச நேரம் பள்ளிக்கூடத்தில் போய் இருக்கலாம் என்று எண்ணினாள்.

மறு நாள் விடிந்ததோ இல்லையோ அவசரம் அவசரமாகக் குளித்தாள் சரோஜா.

''அம்மா, தலையைச் சீவிவிடம்மா, இன்னிக்குப் பள்ளிக்கூடத்துக்கு சீக்கிரம் போகணும்'' என்றாள்.

''இதென்ன அம்மா ஒரு நாளும் இல்லாத திருநாளா இருக்கு? பள்ளிக் கூடத்திலே என்ன உனக்கு திடீர்னு இத்தனை அக்கறை?'' என்று அம்மா கேட்டாள்.

''இல்லேம்மா, இன்னிக்கு எங்க பள்ளிக்கூடத்துக்கு இன்ஸ்பெக்டர் வரார். கொஞ்சம் சீக்கிரமே போகணும்மா.''

இவ்வாறு சரோஜா ஒரு குட்டிப் பொய் சொல்லி விட்டுப் பள்ளிக்கூடத்துக்குக் கிளம்பினாள். போகிற வழியிலேயே ஒரு யோசனை வந்துவிட்டது: 'இன்ஸ்பெக்டர் வரார்னு சொன்னேனே அம்மாகிட்டே, இது மட்டும் பொய் இல்லையா. செ, செ. அம்மா ஒரு பொய் சொன்னதுனாலே அதுக்காக நான் எத்தனை பொய் சொல்லவேண்டியிருக்கு? கடவுளுக்குப் பொய்ன்னு பிடிக்காதுன்னு வாத்யார் சொல்லி யிருக்காரே, ஒரு பொய்யை மறைக்கிறதுக்காக நான் எத்தனை பொய் சொல்லிட்டேன்...அப்படின்னு கடவுளுக்கு என்னைப் பிடிக்காதா?'-

சரோஜா என்னென்னவோ யோசனை பண்ணி மூளையைக் குழப்பிக் கொண்டாள். இவளுடைய அதிருஷ்டம் அன்று பள்ளிக்கூடத்தில் முதலாவது வகுப்பு தமிழ் வகுப்பு. திருக்குறள் பாடம். அதிலும் எந்த அதிகாரம்? 'வாய்மை.' சரோஜா வகுப்பைக் கவனிக்காமல் ஏதேதோ யோசனை பண்ணிக்கொண்டிருந்தாள். தமிழ் ஐயா இதைப் பார்த்துவிட்டார்.

"சரோஜா, எங்கே கவனிக்கிறாய்...ஹும்? அந்த மூன்றாவது குறளைப் படி" என்று அதட்டினார்.

சரோஜா எழுந்து படிக்க ஆரம்பித்தாள்:—

'தன் நெஞ்சு அறிவது
பொய்யற்க; பொய்த்தபின்
தன் நெஞ்சே தன்னைச்
சுடும்'

திக்கிக்கொண்டே சரோஜா வாசித்தாள். தமிழ் ஐயா அவளை அதோடு விடவில்லை..."அதற்கு என்ன பதவுரை எழுதியிருக்கிறது, வாசி" என்றார்.

சரோஜா தொடர்ந்து படித்தாள்:—

"தன் நெஞ்சு அறிவது—தன்னுடைய மனத்துக்கே பொய் என்று தெரிவதை

பொய்யற்க—அந்தப் பொய்யைச் சொல்லாதே.

பொய்த்தபின்-அப்படிப் பொய் சொன்னால், பிறகு—

தன் நெஞ்சே தன்னைச் சுடும்—தன்னுடைய மனமே தன்னைச் சுட்டுப் பொசுக்கும்"

'இந்தத் திருவள்ளுவர் தன்னைப்பற்றியே எழுதியிருக்கிறாரே' என்று சரோஜாவுக்கு ஒரே வியப்பாக இருந்தது. தமிழ் ஐயாவோ, அன்று வகுப்பில் இதற்கு

மேல் இன்னும் வியாக்யானம் செய்தார். 'என்ன கஷ்டம் வந்தாலும் நாம் பொய் சொல்லாமல் இருக்க வேண்டும். நன்மை வரும்போது உண்மை பேசுவது பெரிதில்லையே. கெடுதியே வரும் என்று தெரிந்தாலும் கூட உண்மையே சொல்வதுதான் சிறப்பு'' என்றார். சரோஜாவுக்கு 'ஏன் பள்ளிக்கூடத்துக்கு வந்தோம்' என்று ஆகிவிட்டது. எப்பொழுது வீட்டுக்கு விடுகிற மணி அடிக்கும் என்றே காத்துக் கொண்டிருந்தாள். நேற்று ஒரு நாள் அவளுடைய அம்மாவுக்குச் செய்து கொடுத்த சத்தியம்,—சத்தியமா, பொய்யல்லவா அது என்று தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டாள் — அந்தப் பொய்ச் சத்தியத்தினால் அவள் அடைந்த வேதனை போதும் போதும் என்றாகிவிட்டது !

அப்பா தன்னைக் கோபித்துக்கொண்டாலும், அம்மாவையே கோபித்தாலும் அதனால் என்ன கெடுதி வந்தாலும், இனிமேல் ஒரு நிமிஷம்கூட ஜாடியை உடைத்த விஷயத்தை அப்பாவிடம் சொல்லாமல் இருக்கக்கூடாது என்று தீர்மானித்துவிட்டாள் சரோஜா. அப்பா அம்மாவை ஏதாவது கோபித்து இம்சித்தால், தானே குறுக்கே நின்று தன்னைத் தண்டிக்கும்படி சொல்லிவிடலாம் என்ற முடிவுக்கு வந்தாள்!

## 3

சரோஜா வீட்டிற்கு வந்தபோது அம்மா அப்பாவிடம் ஏதோ பேசிக்கொண்டிருந்தது கேட்டது :

''உங்களுக்குக் கோபம் வந்தாலும் இப்படியா வரும்...? பாவம், அந்தப் பூனையைக் கொண்டு எங்கேயோ விட்டுட்டு வந்துட்டீங்களே'' என்றாள் அம்மா.

''சரிதான். நேற்று நெய் ஜாடியை உடைச்சுது. நாளைக்குப் பால்—செம்பை கவிழ்க்கும், நாளைக்கு மறுநாள்...''

''இப்படி அபாண்டமாகச் சொல்லக்கூடாது. அது என்ன செய்தது பாவம்?'' என்று கேட்டாள் அம்மா.

''ஏன் நெய் ஜாடியை உடைச்சது போதாதா... இன்னும் வேறே?'' என்று கடுகடுப்புடன் அப்பா கேட்டார்.

''நெய் ஜாடியை உடைச்சது···பூனை இல்லை'' என்று மெதுவாக வார்த்தைகளை அசைபோட்டாள் சரோஜாவின் அம்மா. சரோஜா கூர்ந்து கேட்டாள்.

''அப்ப யாரு உடைச்சது ஜாடியை?''

''நீங்கதான் மகா கோபக்காரரர் ஆச்சேன்னு ஒரு சின்னப் பொய்யைச் சொன்னேன். அதுக்காக நீங்க இந்தப் பூனையைக் கொண்டு இப்படி விட்டுடுவீங்கன்னு கண்டேனு...பாவம், எங்கெல்லாம் நின்று தவியாய்த் தவிக்குதோ...'' என்று அம்மா ஒரு சோகக் குரலுடன் கேட்டாள்.

சரோஜாவுக்கு அதைக் கேட்டதும் அழுகை அழுகையாய் வந்தது. உண்மையில் அவளுடைய அம்மா சொன்ன விதத்தில் அப்பாவுக்குங்கூட இரக்கம் வந்து விட்டதுபோலத் தோன்றியது. அதைவிட அவளுக்கு வருத்தம், தான் அப்பாவிடம் முதலில் உண்மையைச் சொல்லவில்லையே என்றுதான்.

''அப்பா, அப்பா, நீ கோவிச்சுக்காதே, ஒண்ணு சொல்லட்டுமா?'' என்று அப்பாவுக்கு அருகிலே வந்தாள் சரோஜா.

''என்னடா கண்ணு சொல்லு'' என்றார் அப்பா.

''அப்பா, நீ கோவிச்சுக்குவே...''

''இல்லையம்மா, கோவிச்சுக்கலே நான்...''

''சத்தியமா கோவிச்சுக்கமாட்டேன்னு சொல்லு.''

''சத்தியமா கோவிச்சுக்கலே,''

''ஜாடியை அம்மாதான் கீழே போட்டு உடைச்சா. ஆனா உன்கிட்டே சொல்லக்கூடாதுன்னு என்னே சத்தியம் வாங்கிட்டா அப்பா...அதனாலேதான் நான் சொல்லலையப்பா''...வார்த்தைகளை முழுதும் முடிக்குமுன் சரோஜாவுக்கு அழுகை அழுகையாய் வந்துவிட்டது. சரோஜாவின் அப்பா சிரித்துவிட்டார். அப்பொழுது தான் சரோஜாவுக்கும் தைரியம் வந்தது.

''அப்பா, என் பூனைக்குட்டி? அது இல்லாமே எனக்கு எப்படியோ இருக்கப்பா. அதைக் கூட்டிகிட்டு வாரியாப்பா'' என்று சரோஜா கெஞ்சினாள்.

அப்பொழுது தடால் என்று சத்தம் கேட்டது. என்ன ஆச்சரியம்! சாக்குக்குள்ளே போட்டு ஊருக்கு வெளியே கொண்டு போய்த் துரத்திவிட்ட பூனைக்குட்டி, இப்பொழுது மறுபடியும் வீட்டை அடையாளம் பிடித்து வந்துவிட்டது; வந்ததோடு மட்டுமில்லை, 'ஷெல்பி'லே சொருகி வைத்திருந்த எதையோ கீழே வேறு தள்ளி விட்டது—உண்மையிலேயே, சத்தியமாகவே, தள்ளி விட்டது! அப்பா அம்மா இருவரும் போட்டி போட்டுக் கொண்டு பூனையைப் பிடித்தார்கள். ஆனால் அது இருவரையும் தப்பித்துக்கொண்டு சரோஜா மடியிலே தாவியது.

அம்மா கீழே விழுந்த புத்தகத்தை எடுத்துக் கொண்டு வந்து கொடுத்தாள். சரோஜாவின் தாத்தா

கடைசிவரை விட்டுப் பிரியாமல் வைத்துப் படித்துக் கொண்டிருந்த புத்தகம் அது. அவருடைய சொத்துக்கு யார் யாரோ தாயாதிகள் வந்து வியாஜ்யம் போட்டு தாவர ஜங்கமங்களை எடுத்துக்கொண்டு போனார்கள். ஆனால் இந்தப் பழம் புத்தகத்தை மட்டும் யாருமே சீண்டுவாரில்லை.

''அது என்ன புஸ்தகம்பா?'' என்று சரோஜா கேட்டாள்.

உண்மையில் அவளுடைய அப்பாவுக்கே அது என்ன புத்தகம் என்று இதுவரை தெரியாது. ரிஜஸ்டர் பத்திர மானால் இதற்குள் கரைத்துக் குடித்திருப்பார்—பழம் புத்தகந்தானே அது!

''அப்பா, நான் கேட்டேன், சொல்ல மாட்டேங் கிறியே, அது என்ன புஸ்தகம்பா?'' என்று மறுபடியும் சரோஜா கேட்டாள்.

''உங்க தாத்தா வச்சுட்டுப் போன சாஸனப் பட்டயம்'' என்று எகத்தாளமாகச் சொல்லிக் கொண்டே அந்தச் சுவடியைத் தூசு தட்டி முதல் முறையாகப் பிரித் தார் அப்பா.

தாத்தா விட்டுப் போயிருந்த சாஸனத்தைப் பிரித்த தும் அந்த உபநிஷதச் சுவடியில் எழுதியிருந்த வாசகம் இதுதான் :—''ஸத்யமேவ ஜயதே!''

அப்பா அதற்கு வியாக்யானம் சொன்னார்: ''பொய் சொன்னே, கருப்புப் பூனை காணாமப் போச்சு. உண்மையை ஒத்துக்கொண்டே, உடனே போன பூனை திரும்ப வந்துட்டுது!''

சரோஜா அந்தக் குடியரசு மந்திரத்தைத் தனக் குள்ளே உச்சரித்துக் கொண்டாள் :—''ஸத்யமேவ ஜயதே!''

# விதியின் எழுத்து

அருவிக் கரையிலிருந்து புறப்படுவதற்கு முன்னுல் நாங்கள் எல்லோரும் ஒரு சிறு கல்லைக் கொண்டு மலை மேலே தட்டித் தட்டி எங்களுடைய பெயர்களைக் கொத்திஞேம். அழிகின்ற இந்த நிலையில்லா உலகத்தில் பின் சந்ததிகளுக்காகச் செய்துவிட்டுச் செல்லும் சிரஞ் சீவிக் காரியம் அது!

நாங்கள் மட்டும் என்ன? நிலைத்து நிற்கவேண்டும் என்று விரும்பாதவர் யாருண்டு இந்த உலகில்? அதோ மீசையும் தாடியும் வளர்ந்து, முடியெல்லாம் சின்ன பின்னமாய்ப் பின்னிச் சுருண்டு ஒன்றிச் சரடு சரடாகத் திரிந்து போய்க் கிடக்கிற அந்தக் கிழவனுங்கூட மலை யிலே பெயரைப் பொறிக்கிருனே!

நானும் நண்பர்களும் அந்தக் கிழவனையே பார்த் தோம். மலையின் மேலே பெயர் பொறிப்பதற்கான யோக்யதை எங்களுக்குத்தான் இருந்தது என்ற ஆணவத் தில், கிழவனைச் சற்றுக் கூர்மையாகவே பார்த்தோம். அவஞே எங்கள் அனைவரையும் மிஞ்சிவிட்டான். கண்ட கண்ட இடத்தில் எல்லாம், மலையில், மரங்களில், புல் தரையில்—இடமிருந்தால், கையெட்டினுல் அந்த மேகத் திலே கூடப்—பெயர் பொறிக்க முனைந்து நின்ருன் கிழவன்!

மெதுவாக நடந்தேன். ஒவ்வொரு இடமாக நின்று பெயர் பொறித்துவிட்டு மரங்களூடே எங்கள் பார்வையி

னின்றும் அவன் மறைந்ததும், வேகமாக நடந்து போய் அவன் பெயர் பொறித்திருந்த இடத்தைப் பார்த்தேன்.

'பார்வதி', 'பார்வதி', 'பார்வதி' என்று அந்த மலையெல்லாம் பொறித்துத் தள்ளி யிருந்தான் கிழவன். அச்சுக் குண்டான எழுத்துக்கள், வண்ண வண்ண வடிவம்!

"என்ன இது! ஒரு பெண்ணின் பெயராக அல்லவா இருக்கிறது!" என்று நண்பர் ராமசாமி ஆவலோடு வந்து பார்த்தார்.

ஆமாம்; ஒரு பெண்ணின் பெயர்தான்; கிழவனுடைய பெயர் இல்லை! பாபநாசத்தின் கல்யாண தீர்த்தத் துறையிலே இருந்த அந்த மரம், செடி, கொடி, பாறைகள் எல்லாம் பர்வத குமாரியின் அந்த வண்ணப் பெயரைத் தாங்கி, 'பார்வதி', 'பார்வதி' என்று நின்றன!

## 2

'ஆனந்த விலாஸ்' பங்களாவுக்கு நாங்கள் திரும்பிய போது நன்றாய் இருட்டிவிட்டது. 'ராச் சாப்பாட்'டை முடித்துக்கொண்டு வெளியே வந்தேன்; நதி வளைந்து திரும்பிய அந்தக் கோணத்தில் இறங்கி, பாறைகளுக்கு மேலே நடந்து போய், உயரமான ஓர் இடத்தில் உட்கார்ந்துகொண்டேன். நிலா வெளிச்சத்தில் பாபநாசம் மலை—பொதிகை மலை - எதிரே நின்றது. தாமிரவருணி நதி வானத்திலிருந்து நிலவு உருகி வந்து தண்ணீராக ஓடுவதுபோல மின்னி மின்னி நடந்தது. 'தமிழ்த் தென்றல்' என்று சொல்கிறார்களே அந்த ரம்யமான காற்று, அகஸ்திய முனிவரின் ஞான வாசனை

யோடு மலையிலிருந்து இறங்கி வந்து அந்த நிலவுத் தண் ணீரில் தவழ்ந்து உடம்பிலே சுருண்டது. எவ்வளவு நேரம் அப்படியே இருந்திருப்பேனோ தெரியாது!

'பார்வதி' என்று ஒரு குரல் கேட்டது. திடுக்கிட்டுத் திரும்பினேன்.

பாறைக்கு மேலே அந்தக் கிழட்டு மனிதன் நின்று கொண்டிருந்தான்!

"என்ன பார்க்கிறீர்கள்? தனிமையைக் கலைத்து விட்டேன் என்று? பயப்படாதீர்கள், நான் பைத்திய மில்லை!"

எனக்கு எப்படி இருந்திருக்கும் இந்த வார்த்தை களைக் கேட்டதும் என்பதை, நீங்களே யூகித்துக் கொள்ளுங்கள்!

கிழவன் என் அருகில் வந்தான். நான் சொல் வதற்கு முன், என் எதிரே பாறையில் சம்மணம் போட்டு உட்கார்ந்து கொண்டான். மடியில் இருந்து ஒரு காவிக் கட்டியை எடுத்துத் தனக்கு முன்பாக அந்தப் பாறையில் 'பார்வதி' என்று எழுதினான்.

"சரி; எழுதிவிட்டேன். இனிமேல் பேச ஆரம்பிக்க லாம்; சொல்லுங்கள், உங்கள் அமைதியை இப்பொழுது நான் கெடுக்கவில்லையே?"

"இப்பொழுது என்ன? என் அமைதியை நீங்கள் கெடுக்க ஆரம்பித்துச் சில மணி நேரம் ஆகிறது!" என்றேன்.

''அப்படியானுல் அந்த அமைதியை மீண்டும் நிலை நிறுத்தி விட்டுத்தான் செல்வேன் நான்!''

இப்படி கூறிவிட்டுக் கிழவன் தன் கதையைச் சொல்ல ஆரம்பித்தான்.

## 3

பார்வதி எனக்கு அத்தை மகள். எங்கள் அத்தை எங்கள் குடும்பத்திலேயே ''கண்ணே கண்ணு'' என்று பிறந்த ஒரே பெண்குழந்தை—நான்கு சகோதரர் களுக்கு ஒரு சகோதரி.

பார்வதி அந்த ஒரே ஒரு அத்தையின் ஒரே மகள். அவள் பிறந்த இரண்டு வருஷத்துக்கெல்லாம் அத்தையும் காலமாகிவிட்டாள்.

அத்தை காலமாகும்போது எனக்கு ஐந்து வயது. என்னையும் பார்வதியையும் கையிலே ஒன்று சேர்த்துப் பிடித்து அப்பாவிடம் ஒப்படைத்து, ''தம்பி, இந்த இரண்டும் உன் குழந்தைகள்'' என்று சொல்லிவிட்டு அத்தை உயிர் துறந்தாள்.

எங்கள் மாமா—பார்வதியின் தகப்பனர்—எப் பொழுதுமே குடும்பப் பொறுப்புத் தெரியாத ஒரு 'மைனர்'. ஆகவே, இரண்டு வயதிலிருந்தே பார்வதி எங்கள் வீட்டில்தான் வளர்ந்தாள்.

பார்வதி நல்ல அழகி. 'நல்ல' என்ற வார்த்தையைக் கிறுக்குத் தனமாகத்தான் உபயோகிக்கிறேன். வேறு அவளுடைய அழகை எப்படி வர்ணிப்பது?

சில பெண்கள் பார்ப்பதற்குக் கவர்ச்சியாய் இருப் பார்கள். ஆனுல் மனம் இருக்கிறதே, அதற்குள் ஆயிரத் தெட்டுக் கோணல்கள் இருக்கும். எங்கள் பார்வதி

அப்படியில்லை; உள்ளமும் உடம்பும் சேர்ந்து ஒருமித்து உருவாகிய ஒரு நல்ல அழகி.

சில பெண்கள் நல்ல சிவப்பாய் இருப்பார்கள். முகத்தில் ஆழாக்கு அழகு இராது. சில பெண்கள் கன்னங்கரேல் என்று இருப்பார்கள். ஆனல் முகத்தில் ஒரு காந்தம் இருக்கும். எங்கள் பார்வதி சிவப்பும் இல்லை; கறுப்பும் இல்லை; பொது நிறம். முகத்தில் ஒரு மின்னல். கண்ணைப் பறிக்கிற மின்னல் இல்லை. கண்களை நிரப்பிக் 'குளு குளு' என்று நிலவு வீசுகிற ஒரு தேஜஸ்!

பார்த்தீர்களா, பார்வதியை வர்ணித்துக்கொண்டே போகிறேன். கதையைச் சொல்லவில்லையே உங்களுக்கு!

பார்வதி மிக மிகக் கெட்டிக்காரி. அவள் வாய் திறந்து பேசினல் கேட்டுக்கொண்டே இருக்கலாம். நேரம் போவதே தெரியாது. வேடிக்கை வரும்; சிரிப்பு வரும்; ஹாஸ்யம் கும்மாளி போடும்! அதே சமயம் பெரிய பெரிய உண்மைகள், தத்துவங்கள் வந்து மின்னல் பளிச்சிட்டுக் கண்ணைப் பறிக்கிறமாதிரி நம்முடைய மனசை ஒரு பறி பறித்து நிற்கும்!

பள்ளிக்கூடத்தில் எந்த வகுப்பிலும் பார்வதிதான் முதல் மார்க்கு. நான்—என்னைப்பற்றி நானேதான் சொல்ல வேண்டும்—படிப்பில் என்றைக்குமே மந்தம் தான். ஆணும் பெண்ணும் ஒன்ருகப் படிக்கிற பள்ளிக் கூடத்தில் நாங்கள் படித்ததால், அவள் எல்லாப் பரீக்ஷையிலும் முதல் மார்க்கு. நான்தான் கடைசி மார்க்கு!

அப்பொழுது எங்கள் தலைமை ஆசிரியராக இருந்தவருக்குக் கூட்டுக் கல்வி முறையில் பெரிய ஆர்வம். பெண் பிள்ளைகள் ஆண் பிள்ளைகளைத் தோற்கடிக்கிருர்கள்

என்று சொல்லிக்கொள்வதில் அபாரமான திருப்தி அவருக்கு. இப்படிச் சொன்னாலாவது ரோசம் உண்டாகி ஆண் பிள்ளைகள் கவனமாகப் படிக்கமாட்டார்களா என்று ஓர் ஆசை!

இந்த ஆசை என் விஷயத்தில் முழுத் தோல்வியாக முடிந்தது! பார்வதி கெட்டிக்காரி என்றால் எனக்கு ஏன் ரோசம் வரவேண்டும்? எனக்குப் பெருமை அல்லவா அதில்!

அவளோடு போட்டி போட்டுப் படிக்க முடியாத காரணத்தினால் இப்படிச் சொல்லவில்லை நான். உண்மையிலேயே அவளுடைய சாமர்த்தியம் எனக்கு வராது. எங்கள் வகுப்பில் வேறு யாருக்குமே வராது! அவள் தனிப் பிறவி.

எஸ். எஸ். எல். ஸி. பரீக்ஷையில் பிரமாதமான மார்க்குகள் வாங்கித் தேறினாள். நானோ 'பத்தாவது' தாண்ட மாட்டாமல் கலைந்து நின்றுவிட்டேன். நின்றே போய்விட்டேன்!

இந்த சந்தர்ப்பத்திலே பார்வதியின் மேல்படிப்பு விஷயமாக எங்கள் குடும்பத்தில் ஆராய்ச்சி நடந்தது. எங்கள் மாமாவோ அத்தை இறந்த பிறகு எப்படி எப்படியெல்லாமோ அலைந்து திரிந்து உடம்பையும் பேரையும் கெடுத்துக்கொண்டு, இந்த உலகத்தை விட்டு மறைந்தார். நானோ படிப்புக்கு ஒரு வகையாக முற்றுப் புள்ளி வைத்துவிட்டேன். இந்த நிலைமையில் அவளை இன்னும் மேலே படிக்கச் சொல்வது எப்படி என்று எங்கள் வீட்டில் யோசித்தார்கள். அம்மாவுக்கு மனத்துக்குள்ளே என்னைப்பற்றிய கவலை; மகனுக்கு மேலாக மருமகள் படிப்பது எப்படி என்ற நினைப்பு!

பார்வதி ரசாயனத்தை இஷ்ட பாடமாக எடுத்துப் படித்து மாகாணத்திலேயே முதலாவதாகத் தேறியிருந்ததால், அந்த சாமர்த்தியம் வீணுவதைத் தலைமை ஆசிரியர் விரும்பவில்லை. நானும் விரும்பவில்லை. பார்வதியிடம் எனக்கு இருந்த இந்த மதிப்பையும் அன்பையும் யாருமே புரிந்துகொள்ள முடியவில்லை. பார்வதிக்கே முடியவில்லை என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

## 4

பார்வதி மேல்-படிப்புப் படிப்பது என்று தீர்மானம் ஆயிற்று. அப்பாவுக்கு இஷ்டமில்லை. அம்மாவுக்கு இஷ்டமில்லை. பார்வதிக்குமே இஷ்டமில்லை! ஆனால், நான் மட்டும் பிடிவாதமாக இருந்தேன். என்னுடைய பிடிவாதத்தை எதிர்க்க யாராலும் முடியவில்லை!

பார்வதி மேல்-படிப்புப் படித்தாள். தொடர்ந்து படித்தாள். படிக்கப் படிக்கப் படிப்பிலே உத்சாகம் வந்துவிட்டது. ரசாயன சாஸ்திரத்தில் ஆனர்ஸ் வகுப்பில் ராஜதானியிலேயே முதலாவதாகத் தேறினாள். உடனே அதே கல்லூரியில் பேராசிரியை உத்தியோகமும் கிடைத்தது. அவளுக்கு விழுந்த புகழ் மாலைகளையெல்லாம் என்னுடைய கழுத்திலேயே மானசீகமாகச் சூட்டிக் கொண்டேன் நான். ஆனால் உலகமோ என் கழுத்தில் அவளுடைய மணமாலையைச் சூட்டத்தான் காத்திருந்தது.

அம்மா சொன்னாள்: "பார்வதி கண்ட கண்ட ஆண் பிள்ளைகளோடு பழகுவது எனக்குப் பிடிக்கவில்லை. காலா காலத்தில் கல்யாணம் பண்ணாமல் பெண்களைப் படிக்க விடுவதே இப்படித்தான்!"

எனக்கு அப்படிப் படவில்லை. பார்வதி எல்லாரையும் போல் கல்யாணம் பண்ணிக்கொண்டு 'புருஷனுக்குச் சமைத்துப் போடுவதற்காகப் பிறந்த' ஒரு யந்திரம் இல்லை. ரசாயன உலகமே அவளால் எத்தனையோ சாதனைகளை எதிர்பார்த்திருந்தது. அவள் ஒரு மதாம் கியூரி, ப்ளாரன்ஸ் நைடிங்கேல்! கடவுள் அவளைப் படைக்கும்போது உலகத்தின் கண்முன்பு பல அதிசயங்களைச் செய்து காட்ட நினைத்தார்—என்றெல்லாம் எண்ணினேன். ஆனால் கடவுள் நினைப்பு வேறுவிதமாக இருந்திருக்கிறது என்று பின்னர்தான் தெரிந்தது!

அர்த்தமில்லாமல் கடவுளின் பெயரை இழுக்கிறேன் என்று நீங்கள் குற்றம் சாட்டுவீர்கள். என்னை மன்னிக்க வேண்டும். இந்த உலகில் அநேக காரியங்களை விளக்குவதற்குக் கடவுள்தான் வந்து உதவுகிறார். இல்லையென்றால், மனித் அழிவுக்கான பல கேள்விகளுக்கு விடையே இல்லாமல் நாம் குமைய வேண்டியதுதான். நானும் அப்படித்தான் குமைந்தேன். என்னைவிட, அதிகம் குமைந்தவள் பார்வதிதான்.

பார்வதிக்குப் பேராசிரியர் வேணுகோபாலனிடம் உண்மையான நேசம் இருந்தது. வேணுகோபாலனுக்கும் அப்படித்தான்—பரஸ்பரம். என்வரையில் நான் இவர்கள் பழகுவதை ஆதரிக்கவே செய்தேன். அழகும் கல்வியும் நிறைந்த ஒரு பெண்ணின் மனம் எனக்கு நன்றாகப் புரிந்தது. அந்த மனம் எந்த வகையான ஆடவர்களின் உறவில் ஆனந்தம் அடையும் என்பதை நான் உணர்ந்திருந்தேன். ஆனால் அம்மாவுக்கு அது புரியவில்லை.

''படித்திருந்தால்தான் என்ன! இப்படியா பேச்சு பேச்சு பேச்சு என்று ஆண்களோடு திரிவது? எனக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை!'' என்றாள் அவள்.

"அம்மா, நீ ஒரு கர்நாடகம். பார்வதியின் புத்தியும் சாதுர்யமும் உனக்கு என்ன தெரியும்? அவள் நம்முடைய குடும்பத்தில் பிறக்க வேண்டியவளே இல்லை. மேனாடுக்ளில் இப்படி ஒரு கெட்டிக்காரப் பெண் இருந்தால்...?"

"போதும் போதும்; நீ படித்த படிப்புக்கு இப்படிப் பேசத்தான் வேண்டும்."

"நான் படிக்கவில்லை. பாழாய்ப் போகிற 'ஸையன்ஸ்' எனக்கு வரமாட்டேன் என்கிறது. ஆனால் பார்வதி அப்படியில்லை. எத்தனை புதுப்புது விஷயங்களைச் சொல்கிறாள் தெரியுமா? காலேஜ் எல்லாம் அதிசயப் படுகிறது!"

அம்மா இதற்குமேல் என்னோடு பேசவில்லை. அவளுக்கு என்னுடைய மனமே புரியவில்லை. அவள் கவலை, பார்வதியை மருமகள் ஆக்க முடியவில்லையே என்பதிலேதான் இருந்தது!

இந்த நிலைமையில்தான் ஒரு நாள் பார்வதி என்னுடைய அறையில் நுழைந்தாள்:

"அத்தான், உங்களோடு ஒரு விஷயம் மனம் விட்டுப் பேசவேண்டும். அனுமதி தருகிறீர்களா?" என்று கேட்டாள்.

"நானும் அதே விஷயத்தை உன்னிடம் மனம் விட்டுப் பேசவேண்டும் என்றுதான் நினைத்துக்கொண்டிருக்கிறேன். ஆனாலும் எனக்குத் தைரியம் வரவில்லை. நீயே வந்துவிட்டாய். என்ன இருந்தாலும் உன்னுடைய அறிவின் பலம் எனக்கு வராதுதான்."

"சரி, சரி! திரும்பத் திரும்ப இப்படியே சொல்லாதீர்கள். நானா படிக்கவேண்டும் என்று சொன்னேன்!

நீங்கள்தானே வற்புறுத்தினீர்கள்? இப்பொழுது நீங்களே உங்களைக் குறைத்துப் பேசிக்கொண்டால்...?''

''மனம் விட்டுச் சொல்கிறேன். பார்வதி, நீ ஒரு அபூர்வமான புத்திசாலி. உன்னைப் பற்றி நான் எவ்வளவு பெருமை அடைகிறேன் தெரியுமா? நாலு பேர் உன் பேச்சையும் திறமையையும் பாராட்டிச் சொல்லும் போது எனக்கு இந்த ஜன்மம் எடுத்ததன் பலனே கிட்டி விட்டது போலப் பெருமை உண்டாகிறது.''

''அத்தான், நீங்கள் இப்படியெல்லாம் பேசினல் எனக்குக் கஷ்டமாக இருக்கிறது. நான் ஒரு அசடாகப் பிறந்தேன் இல்லையே என்று அடிக்கடி நினைக்கிறேன்.''

''இல்லை, அப்படி நினைக்கக்கூடாது நீ. புத்திசாலித் தனம் என்பது கடவுள் கொடுக்கிற வரம். அது எல்லா ருக்கும் கிடைப்பதில்லை. உனக்குக் கிடைத்திருக்கிறது. அதை முற்றிலும் உணர்கிறேன் நான். உன்னுடைய அறிவுக்கு முன்னல் நான் ஒரு துரும்பு. சத்தியமாகச் சொல்லுகிறேன். என்னை நம்பு.''

பார்வதி ஒன்றுமே பதில் பேசவில்லை. அவளுடைய கண்கள் இரண்டும் கலங்கின. வார்த்தைகள் வராமல் தடுமாறிக் கண்ணீர் வந்தது.

''நீ என்ன சொல்ல வந்தாயோ அதை இன்னும் சொல்லவில்லை—அப்படித்தானே?'' என்று கேட்டேன்.

''ஆமாம். அது உங்களுக்கு எப்படித் தெரியும்?''

''பார்வதி, கடவுள் எனக்குப் படிப்பைத் தரவில்லை, ஆனல் உன்னை அறிந்து கொள்ளக்கூடிய சக்தியைமட்டும்

கொடுத்திருக்கிறார். உன் மனம் எனக்குத் தெரியும். வேணுகோபாலனை மணந்துகொள்ள நீ ஆசைப்படுகிறாய். ஆனால் அதே சமயம் என்னை எண்ணி அநுதாபப்படுகிறாய் மனசாக்ஷி என்று ஒன்று இருந்துகொண்டு உன்னை வதைப்பது எனக்குத் தெரியும்.''

பெருமூச்சு விட்டுக் கொண்டு பார்வதி பேச ஆரம்பித்தாள்:—

''அத்தான், முதலில் இந்த அறையில் நுழையும் போது என்ன பேசுவது, எப்படிப் பேசுவது என்று யோசித்துக் கொண்டே வந்தேன். ஆனால் நீங்கள் என் காரியத்தைச் சுலபமாக்கி விட்டீர்கள். இனி நான் சொல்ல வேண்டியது என்ன இருக்கிறது?''

''நீ வேணுகோபாலனை மணந்துகொள்வது எனக்கு பூரண சம்மதம். முழு விருப்பம். உண்மையில் அந்தத் திருமணத்தை நான் வற்புறுத்துகிறேன். நம் இருவருக்குள்ளும் கல்யாணம் என்பது அர்த்தம் இல்லாத வெறும் சடங்காகத்தான் முடியும். உன்னுடைய மனம் இருக்கும் நிலை வேறு, என் மனத்தின் நிலை வேறு. உனக்கு ஏற்ற வரன் வேணுகோபாலன் தான்.''

பார்வதி பேசாமல் இருந்தாள்.

''என்ன யோசிக்கிறாய்?'' என்று கேட்டேன்.

''இன்னும் ஒரு வாரத்தில் அவரிடம் முடிவாக என் கருத்தைச் சொல்வதாகக் கூறியிருக்கிறேன். அதனால்தான் இன்று இங்கு வந்தேன். ஆனால் வந்த பிறகோ நிலைமை இன்னும் கடினமாகிவிட்டது நீங்கள் சுலபமாக முடிவு சொல்லிவிட்டீர்கள். எனக்கு அப்படிச் சொல்ல முடிய

வில்லை. அத்தான், வாஸ்தவமாகச் சொல்கிறேன், உங்கள் அன்பு என்னைத் திகைமுட்டச் செய்கிறது!''

இப்படிச் சொல்லிவிட்டுப் பார்வதி எழுந்து சென்ருள். அதன் பிறகு ஒரு வாரம் வரை அவள் என் அறைப் பக்கம் வரவில்லை. ஞாயிற்றுக்கிழமை மாலை நானே அவள் அறைக்குச் சென்றேன்.

''என்ன பார்வதி, ஒரு வாரம் ஆகப் போகிறதே. முடிவுக்கு வந்தாயா?'' என்று கேட்டேன்.

''ஆமாம். நாளைக்கு வேணுகோபாலனைச் சந்திக்கிறேன்'' என்ருள்.

''சரி'' என்று சொல்லிவிட்டுத் திருப்தியோடு சென்றேன்.

மறுநாள் மாலை பார்வதி என் அறைக்கு வந்தாள்.

''என்ன! சொல்லிவிட்டாயல்லவா?'' என்று கேட்டேன்.

''ஆமாம். ஆனுல் நீங்கள் சொன்னபடி இல்லை!''

''அப்படியென்ருல்?''

''அத்தான், இனி இந்த ஜன்மத்தில் தங்களைத் தவிர வேறு ஒருவரை மணப்பது என்பது இல்லை. அதையேதான் வேணுகோபாலனிடம் சொல்லிவிட்டேன்'' என்ருள்.

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது!

''அத்தான், இந்த உடம்பு தங்களுக்கு என்று வளர்க்கப்பட்டது. இந்த உள்ளம் சிறு வயதில் தங்களுக்

குச் சொந்தமாகிவிட்டது. இப்பொழுது புதிதாக வேறு ஒருவருக்கு எப்படி இதில் உரிமை உண்டு?''

உணர்ச்சியினுல் அவளுடைய உடல் நடுங்கியது.

''பார்வதி, நீ எத்தனேயோ படித்தவள். உனக்கு நான் சொல்லியா தெரியவேண்டும்? நாம் இருவரும் கணவன் மனேவி என்று குடித்தனம் செய்வது இயல்கிற காரியமா? நீயே சொல். விஞ்ஞான உலகில் உன்னுடைய முன்னேற்றத்துக்கெல்லாம் நான் ஒரு பெரிய முட்டுக் கட்டையாக நிற்பேன். கணவன் என்ற உரிமை—உணர்ச்சியின் வசமாகி, படிப்படியாக உன்னுடைய நண்பர்கள், உனது நடமாட்டம், பேச்சு எல்லாவற்றையும் நான் சந்தேகிக்க ஆரம்பித்துவிடுவேன். பிறகு வாழ்க்கை இருவருக்கும் நரகமாகிவிடும். வேண்டாம், வேண்டாம். அது முடியாத காரியம்......''

அறையில் ஒரு மெளனம் வியாபித்தது. வெகு நேரம் இருவரும் பேசாமல் இருந்தோம்.

''சரி, அத்தான், நான் உங்களேப் பிறகு பார்க்கிறேன்'' என்று சொல்லிவிட்டுப் பார்வதி சென்ருள்.

அன்று இரவு சாப்பிட்டுவிட்டு மாடிக்குப் போனுல் அவள் அறையில் விளக்கு எரிந்துகொண்டிருந்தது. எட்டிப் பார்த்தேன். நாற்காலியில் சாய்ந்துகொண்டு பார்வதி கடும் யோசனேயில் இருந்தாள்.

''என்ன இது? இன்னும் சாப்பிடவில்லேயா?'' என்று கேட்டேன்.

"இல்லை! எனக்கு இன்று ஒன்றும் வேண்டாம். எப்படியோ இருக்கிறது உடம்புக்கு."

"உடம்புக்கு ஒன்றும் இல்லை. எல்லாம் மனக் குழப்பம்தான். அதிகமாகப் படித்தவர்களே எப்பொழுதும் இப்படித்தான், சிறு விஷயத்தையும்கூடப் பலமாக யோசிப்பார்கள்."

"இல்லை, இல்லை. இது சிறு விஷயமே இல்லை. என் மூளையை யெல்லாம் குழப்புகிற பெரிய விஷயம்..."

"அதெல்லாம் இல்லை. இரவு உறங்கிவிட்டுக் காலையிலே எழுந்தால், எல்லாம் தெளிவாகிவிடும். படுத்துக் கொள்" என்று சொல்லிவிட்டு நான் திரும்பினேன்.

அவ்வளவுதான். அதன் பிறகு பார்வதியை நான் பார்க்கவேயில்லை. மறுநாள் காலை அவளுடைய மேஜையின் மேல் ஒரு கடிதம் இருந்தது. அதை எடுக்கிற அவசரத்தில், அதன் மேல் வைத்திருந்த கண்ணாடிக் குண்டைக் கீழே தள்ளிவிட்டேன். தரையிலே விழுந்து விளிம்பு உடைந்து ஒடியது அது. பதறுகிற கையோடு கடிதத்தைப் பிரித்தேன்.

"அன்புள்ள அத்தானுக்கு,

இரண்டு வயதில் என் அன்னை உங்களிடம் என்னை ஒப்படைத்து மறைந்தாள். அந்த வினாடியிலிருந்து நான் உங்களுக்கே உரியவள். இந்த உடம்பை வளர்த்தவள் உங்கள் அம்மா. இந்த உள்ளத்தை வளர்த்தது நீங்கள். இப்பொழுது இந்த உள்ளம் இன்னொருவரை நாடினால் அது மன்னிக்க முடியாத பெரும் பாவம். என்னையே

மருமகள் என்று சதா கனவு கண்டு வந்த அத்தையின் முன்பு நான் எப்படி இன்னொருவரை மணப்பது? உங்களுக்கு ஏற்ப என்னை நான் மாற்றிக்கொண்டு வாழலாம் என்றாலோ, உங்கள் மனப்பான்மையிலும், நீங்கள் சொல்கிற வாதத்திலும் உண்மை இருக்கிறது. நியாயம் இருக்கிறது. உங்களைத்தான் நான் மணக்க வேண்டும் என்று நீங்கள் என்னை வற்புறுத்தி இருந்தால் ஒருவேளை அதை மீறுவதற்கு என் மனம் துணிந்திருக்கக் கூடும். ஆனால் நீங்களோ எனது நலத்துக்காக உங்களைக் கழித்துக் கொள்கிறீர்கள். உங்களுடைய அந்த எல்லையற்ற அன்பைக் கண்டு என் உள்ளம் தடுமாறுகிறது. என்ன செய்வேன்! நான் படித்த ரசாயன சாஸ்திரத்தில் மனித அறிவையும் மன நிலைகளையும் நினைத்த மாத்திரத்தில் மாற்றி அமைக்கக் கூடிய ரசவாத வித்தை எதுவும் இல்லையே!

இன்று நாம் பிரிகிறோம். காலம் என்ற நதியின் கரையில் ஒரு நாள், ஒரு ஜன்மத்தில், நாம் இருவரும் மீண்டும் சந்திப்போம். அப்பொழுது நமக்குள் அறிவினாலோ, அழகினாலோ, மன நிலையினாலோ எவ்வித பேதமும் இராது; அப்பொழுது முடிவற்ற அந்தக் கால நதியின் கரையில் மனம் ஒத்து நாம் நடந்து செல்வோம்—

பார்வதி.''

## 5

தாடிக் கிழவர் எழுந்தார்.

''உங்கள் கதை ஆச்சரியமாக இருக்கிறது. காதலிலும் ஒரு புதுமையான காதலாக இருக்கிறது உங்கள் காதல்!'' என்றேன்.

"ஐந்தாறு காதலைக் கண்டுவிட்ட மாதிரி பேசுகிறீர்களே—சொல்லுங்கள் பார்க்கலாம், பார்வதி எங்கே சென்றிருப்பாள்?—காலம் என்னும் நதி என்று சொன்னாளே, அது இந்த நதி மாதிரிதான் இருக்குமோ? அதன் கரை இந்தப் பாறை மாதிரிதான் கடினமாக நிற்குமோ? சொல்லுங்கள், உங்களுக்குத் தெரிந்தால் சொல்லுங்கள்! தெரியாவிட்டால் என்னைப் பற்றி மதிப்புரை சொல்லாமல் மௌனமாக நடவுங்கள். அவ்வளவுதான்—நமஸ்காரம்."

"சுந்தரம்!" என்று கூப்பிட்டுக்கொண்டே பங்களா நண்பர் என்னைத் தேடிப் பிடித்து அங்கே வந்துவிட்டார். அவர் தலை தெரிந்ததோ இல்லையோ, கிழவர் 'விறு விறு' என்று நடக்க ஆரம்பித்தார்.

"சரிதான். இவ்வளவு நேரமாய்க் காணோமே என்று பார்த்தேன். இந்தக் கிழவனிடமா அகப்பட்டுக்கொண்டீர்கள்!" என்றார்.

"ஏன்?" என்று ஆவலோடு கேட்டேன்.

"இனிமேல் இந்தக் கிழட்டுப் பயல் பங்களாப் பக்கம் வந்தால் காலைத் தறித்துவிடும்படி காவல்காரனிடம் சொல்லியிருக்கிறேன்" என்றார் நண்பர் ஆவேசத்தோடு.

"என்ன அப்படி?"

"என்னவா, பத்து நாள் முன்பு நம்முடைய பங்களாச் சுவர் முழுவதும் 'பார்வதி, பார்வதி' என்று காவிக் கட்டியினால் கிறுக்கித் தள்ளிவிட்டான் இந்தக் கிறுக்குப் பயல்! மறுபடி வெள்ளையடித்து ஒரு வாரந்தான் ஆகிறது. காலம் போகிற போக்கைப் பாருங்களேன்—

இதற்குப் பெயர் கிறுக்குத்தனமா, இல்லை, வம்புத் தனமா?''

அந்தக் கேள்விக்கு என் மனதுக்குள்ளேயே நான் பதில் சொல்லிக்கொண்டேன்:

''இரண்டும் இல்லை. இதற்குப் பெயர்தான் அன்பு! அவன் எழுதுகிருனே எழுத்து, அதுதான் அவனுடைய விதியின் எழுத்து!''

# தூண் மறைவில்!

தீபாவளியன்று நிச்சயம் 'ஒரு ஸ்பெஷல் நாடகம்' இருக்கும் என்று எல்லாருக்கும் தெரியும். ஆனால் இந்த மாதிரி ஒரு "புரட்சி"யை யாரும் எதிர்பார்க்கவே இல்லை!

ஹாஸ்ய நடிகர், நகைச்சுவை வேந்தர், விகட சக்கரவர்த்தி வேங்கடசாமி 'ஹிரண்யன் வதம்' என்ற ஸ்பெஷல் நாடகத்தில் தோன்றுகிறார், அதுவும் நரசிம்ம வேடத்தில் தோன்றுகிறார் என்று கேட்டால் யாராலே தான் அதை நம்ப முடியும்? முதலில், இதுவும் ஒரு ஹாஸ்யம் என்று எண்ணி ஜனங்கள் சிரித்தார்கள். பிறகு தெருச் சுவர்களில் விளம்பரக் காகிதங்கள் ஒட்டியதைப் பார்த்ததும், சிரிப்பதைத் தளர்த்திக் கொஞ்சம் நிதானித்தார்கள். பின்னர், பத்திரிகைகளில் இதைப் பற்றிய முன்னறிவிப்புக்களோடு "நாடக உலகில் ஒரு நூதனப் புரட்சி!" என்ற விசேஷக் குறிப்புப் பிரசுரமாகியதும், பொதுமக்கள் அதை நம்ப முயன்று திணறினார்கள்!

இத்தனை திணறலுக்கும் மத்தியில், பொது மக்களையும்விட அதிகமாகத் திணறியவர் ஒருவர் இருந்தார்; அவர்தான் இந்தத் திணறலுக்கு எல்லாம் காரணரான திருவாளர் வேங்கடசாமி அவர்கள்—ஹாஸ்ய நடிகர், நகைச்சுவை வேந்தர், விகட சக்கரவர்த்தி, இத்தியாதி இத்தியாதி!

இருபத்தைந்து ஆண்டுகள். ஒரு கால் நூற்றாண்டு, வேடிக்கை விநோதங்களாலும், அணுகுண்டு ஹாஸ்யங்

களாலும், நகைச்சுவை மத்தாப்புக்களாலும், விகடக் கல்வெடிகளினாலும் பொதுமக்களை மூச்சுத் திணறச் செய்த வேங்கடசாமி இப்பொழுது நரசிம்ம மூர்த்தியாக அவதரிக்கவேண்டுமே என்ற அந்தப் பெரிய பிரசவ வேதனையில் இருந்தார்! தம்முடைய தலை தெரிந்ததுமே பொதுமக்கள் கொட்டகை அதிர்ந்து விழும்படியாகக் கைதட்டி ஆர்ப்பரித்து விடுவார்களே, இந்த நிலையில் தெய்விகமான அதே சமயம் பயங்கரமான, ஒரு வேடத்தில் தோன்றி ஹிரண்யனை மட்டுமல்லாமல், அத்தனை பொதுமக்களையுமே பயமுறுத்தி ஆகவேண்டுமே என்று எண்ண எண்ண வேங்கடசாமிக்கு உடம்பெல்லாம் நடுங்கியது!

"நாடக உலகில் இம்மாதிரி ஒரு புரட்சி செய்தால் தான் இனிமேல் சரிப்பட்டு வரும். மீண்டும் மீண்டும் ஒரே நடிகர் ஒரே மாதிரியான தோற்றத்தில் வந்து வந்து மக்களுக்குச் சலிப்புத் தட்டிவிட்டது. தயங்காதே வேங்கடசாமி!" என்று நாடக முதலாளி பிரி முறுக்கினார்! எப்படியிருக்கும் வேங்கடசாமிக்கு?

ஒத்திகை ஆரம்பமாகும் தினத்திற்கு இரண்டு வாரங்கள் முன்பிருந்தே நரசிம்ம மூர்த்தியைப் பற்றிய வர்ணனைகளும், வீராவேசத்தின் நுட்ப இயல்புகளையும் ஆராய ஆரம்பித்தார் வேங்கடசாமி! மந்திர சாஸ்திரங்களில், நரசிம்ம மூர்த்தியின் தத்துவங்களைப்பற்றி என்ன சொல்லியிருக்கிறது, எப்படிச் சொல்லியிருக்கிறது, என்றெல்லாம் படித்துப் படித்து அநேக வரிகள் அவருக்கு மனனம் ஆகிவிட்டன! மேனாடுகளில் சில ஹாஸ்ய நடிகர்கள் பயங்கரமான வேடங்களில் எதிர் பாராத முறையில் தோன்றி வெற்றிகரமாக நடித்துப் பொதுமக்களின் வியப்பையும் பாராட்டையும் எப்படிப்

பெற்றுக் கொண்டார்கள் என்ற குறிப்புக்களை யெல்லாம் படிக்கப் படிக்க அவருக்கு ஊக்கம் பிறந்தது! சில சமயங்களில் அந்தக் குறிப்புக்களைப் படித்துக்கொண்டே, அந்த வேகத்திலேயே முகத்தை ஒரே பயங்கரமாக வைத்துக்கொண்டு கண்ணாடிக்கு முன்னாலே போய் நிற்பார். ''அடே ஹிரண்ய கசிபூ உஉஉ!'' என்று சீறுவார்! அப்படியே இரண்டு கைகளையும் பிசைந்து கொள்வார். அந்த முகம் பார்க்கும் கண்ணாடியைக் கடித்துக் குதறுவதைப்போலப் பற்களை அப்படியே 'நற நற' என்று நெரிப்பார். உடனே அந்தக் கண்ணாடியை நோக்கிப் பாய்வார்!

நாள் ஆக நாள் ஆக, வேங்கடசாமி ஒரு பயங்கர சாமியாகவே மாறினார். சதா வேடிக்கையும் சிரிப்பும் விளையாடுகிற அவருடைய முகத்தில், இப்பொழுது அவரை அறியாமலேயே ஒரு பயங்கரம் படர ஆரம்பித்தது. இதைக் கண்டு அவருடைய நண்பர்கள் மட்டுமில்லை, சொந்த மனைவியே பயப்பட ஆரம்பித்தாள். நாடக முதலாளிக்கோ, பிறருடைய பயம் எவ்வளவுக் கெவ்வளவு அதிகரித்ததோ அவ்வளவுக் கவ்வளவு மனத்தில் உற்சாகம் எவ்வியது! ''வெற்றி; சந்தேகமில்லாமல் இந்தத் தீபாவளி ஸ்பெஷல் அமோக வெற்றிதான். எத்தனையோ 'ஒன்ஸ்மோர்கள்' கிடைக்கும்!'' என்று குதூகலப்பட்டார் அவர்.

## 2

இதுவரை அந்த நடிகருக்குப் பழக்கம் இல்லாத புதிய நாடகம் என்ற காரணத்தால், ஒத்திகைகள் மும்முரமாக நடந்தன. தீபாவளிக்கு முந்திய இரவு உடை—ஒத்திகையே, மேடையிலே எப்படி நடக்குமோ அதே போன்ற ஏற்பாடுகளுடன் நடப்பது என்று திட்டம்!

ஆயிற்று; உடை ஒத்திகை ஆரம்பிப்பதற்கு முன்பு மணிகூட அடித்தார்கள்! 'விறு விறு' என்று திரைகள் ஏறுவதும் இறங்குவதுமாக நாடகத்தின் முன் பகுதி விரைவாக ஓடியது. இனி, நரசிம்ம மூர்த்தி தோன்றுகிற காட்சி.

ஹிரண்யனும் பிரகலாதனும் பலமாக வாதம் செய்கிறார்கள். "எங்கேடா இருக்கிறான் நீ சொன்ன அரி?" என்று கோபாவேசத்தோடு கேட்கிறான் ஹிரண்யன்.

"தூணிலும் இருக்கிறான், அணுவைச் சத கூறிட்ட கோணிலும் இருக்கிறான்" எனப் பிரகலாதன் 'கணீர்' என்று பதில் சொல்லுகிறான். உடனே "நன்று நன்று" என்று அண்டமே குலங்கும்படியாகச் சிரிக்கிறான் ஹிரண்யன்.

இந்தக் கட்டம் பிரமாதமாக இருந்தது! முதலாளிக்கு மிக்க திருப்தி. இதோ! தூணுக்கு மறைவிலிருந்து அந்த அட்டையைக் கயிற்றினால் அசைக்கிறார்கள். தூண் பிளக்கிறது. தோன்றி விட்டார் நரசிம்ம மூர்த்தி!

"சபாஷ்" என்றார் முதலாளி! இதற்குள் நரசிம்ம மூர்த்தி ஹிரண்யன் மேல் பாய்ந்து அவனை அப்படியே செந்தூக்காகத் தூக்கி-அடாடா! இதென்ன! ஒத்திகையிலே திடீரென்று மாறாட்டமா? - "ஏ வேங்கடசாமி! ஏ வேங்கடசாமி! விடு! விடு! கழுத்து!" என்று ஒரு கதறல் கேட்டது!

திருவாளர் வேங்கடசாமிக்கே அப்பொழுதுதான் பிரக்ஞை வந்தது! 'அவதாரம்' கலைந்து கண்ணை விழித்துப் பார்த்தார்! "என்ன காரியம் செய்வதற்கு இருந்தோம்!" என்று அப்பொழுதுதான் உணர்ந்தார் அவர்!

நாடக முதலாளிக்கு மிக மிகத் திருப்தி. "தத்ரூபம்! தத்ரூபம்!" என்று வேங்கடசாமியைப் பாராட்டிக்

கொண்டே, ஹிரண்யன் வேடம் போட்டிருந்த சிவ சுப்பிரமண்யத்தை மறுநாள் நாடகத்தில் கொஞ்சம் கருணையோடு கையாள வேண்டியதன் அவசியத்தையும் லௌகிகமான முறையிலே எச்சரிக்கை செய்தார்!

## 3

ஆயிரக்கணக்கான மக்கள், ஆடவர், பெண்டிர், குழந்தைகள், மொய்த்திருந்தார்கள்! நரசிம்ம மூர்த்தி தோன்றுகிற காட்சி! பொதுமக்கள் அனைவரும் அப்படியே அந்த ஒரு கணத்தில் முப்பத்து முக்கோடி தேவர்களாகவே மாறிக் கண் இமைகளைக் கொட்டாமல் மேடையையே பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

தூண் நிற்கிறது. அதன் அருகிலே ஹிரண்யனும் பிரகலாதனும்! அவர்களுக்குள் வாதம் நடக்கிறது! இதோ என்ன ஆயிற்று? ''தடால்'' என்று ஒரு சப்தம். தூண் இரண்டாகப் பிளக்கிறது. தோன்றிவிட்டார் நரசிம்ம மூர்த்தி!

''ஏ, ஹிரண்ய கசிபூ உஉஉ!'' என்று ஒரு கர்ஜனை. அண்ட பிண்ட சராசரங்கள் எல்லாம் ''கிடு கிடு கிடு'' என்று நடுங்கின. ஹிரண்யன் என்ன ஆனான்?

''மட மட மட'' என்று கை தட்டல்கள் நெரிந்தன! ''சபாஷ்'' ''பலே'' ''பலே பேஷ்'' என்று கூச்சல்கள்! இடையிடையே ''ஒன்ஸ்மோர்''கள் வேறு! அடாடா!

ஹிரண்யன் என்ன ஆனான்!

''ஏ வேங்கடசாமி, ஏ வேங்கடசாமி! அடேய்! அடேய்! கழுத்து! கழுத்து! அடேய் கொலைகாரப்...''

அவ்வளவுதான்! எல்லாம் ஒரு நொடிப்பொழுது வேலை!

"அட கொலேக்காரப் பாதகா! என்ன காரியமடா செய்தாய்?" என்று பதறிக் கொண்டே தூணுக்கு மறைவிலே இருந்து ஓடி வந்தார் முதலாளி. அவரைப் பின் தொடர்ந்து இன்னும் பத்துப் பேர்! திரை தூக்குபவர் அப்படியே பாசக் கயிற்றைக் கை நழுவ விட்டு விட்டு ஓடினர்! அடுத்த கணம் கொட்டகையில் இருந்த ஜனங்கள் அத்தனே பேரும் மேடையிலே பாய்ந்தார்கள்!

"ஏ ஹிரண்ய கசிபூ உஉ!" என்று மீண்டும் கர்ஜனே! அந்தக் கூட்டத்தை யெல்லாம் பிளந்து சாடிக் கொண்டே "மேக்-ஆப்" அறையிலே பாய்ந்தார் வேங்கடசாம். "ஏ ஹிரண்ய கசிபூ உஉஉ!" என்று சிம்ம கர்ஜனே! அந்த அறையின் சுவர்கள் எல்லாம் நடு நடுங்கின! அங்கிருந்த நிலேக் கண்ணுடிகள் அத்தனேயும் நிழல் விட்டு ஆடின! வேங்கடசாமியின் கண்முன்பு அந்தக் கண்ணுடிகளில் அவருடைய நிழல் தெரியவில்லே. ஹிரண்ய கசிபு தான் நின்று சீறினுன். எதிரும் எதிருமாக நின்ற அந்தக் கண்ணுடி வரிசைகளில் எல்லாம், ஒன்றிலே படிந்த நிழல் இன்னென்றில் பிரதிபலித்து, மற்ருென்றிலே படர்ந்து, அடுத்ததில் தாவிப் பக்கத்தில் உள்ளதில் பாய்ந்து பத்து, நூறு, நூருயிரம், கோடி ஹிரண்ய கசிபுகள் வேங்கடசாமியின்—இல்லே—நரசிம்ம மூர்த்தியின் முன்னுல் சீறி நின்ருர்கள்! மீண்டும் ஒரு பயங்கரமான யமசிம்ம கர்ஜனே!—"ஏ ஹிரண்ய கசிபூ உஉஉ!"

வேங்கடசாமி அப்படியே அந்த நிலேக்கண்ணுடியிலே போய் மண்டையை மோதிக்கொண்டு சிதறினுர்!

## 4

"தட தட" வென்று சத்தம் கேட்டது! இழுத்துச் சாத்தி உள்ளே பூட்டியிருந்த அறைக் கதவை முதலாளி தட்டிக் கொண்டிருந்தார்!

வேங்கடசாமி அன்றைய உடை - ஒத்திகைக்குப் பின் ஏற்பட்ட இந்தப் பயங்கரமான கனவிலிருந்து பதறி விழுந்து மூச்சுத் திணறிக்கொண்டே ஓடி வந்து கதவைத் திறந்தார்.

''என்ன வேங்கடசாமி! இன்னுமா உறக்கம்! நேற்று ஒத்திகையின் அலுப்பு உனக்கே இப்படியிருந்தால், உன் கையிலே கொண்டு கழுத்தைக் கொடுத்தானே சிவ சுப்பிரமணியம், அவனுக்கு, இன்னும் எத்தனை அலுப்பு இருக்கும்!'' என்று சொல்லிக்கொண்டே சிரித்தார் அவர்!

வேங்கடசாமி சீறினார்!

''இந்த ஹாஸ்யம் எல்லாம் இனிமேல் நம்மிடம் வேண்டாம்! எனக்குக் கெட்ட கோபம் வரும்! ஆமாம்!'' என்றார் வேங்கடசாமி. இதைக் கேட்டதும் முதலாளிக் குக் குரல்வளை அடைத்தது. மிரள மிரள விழித்தார்!

''இப்படியெல்லாம் முழித்தால், மசிந்துவிட மாட் டேன். நிச்சயமாக மாட்டேன். இன்றைய தீபாவளி ஆட்டம் நடக்கப் போவதில்லை! நானும் நரசிம்மனாகத் தோன்றப் போவதில்லை'' என்று ஒரு போடு போட்டார் வேங்கடசாமி!

''தீபாவளி ஸ்பெஷல் ஆயிற்றே. ஏகப்பட்ட விளம் பரம் எல்லாம்.........'' என்று மெல்லிய குரலில் சன்ன மாக இழுத்தார் முதலாளி.

''அதெல்லாம் எனக்குத் தெரியாது. ஹாஸ்ய நடிகன் பயங்கர வேடத்தில் தோன்றுவதைப் பற்றி எனக்கு ஆட்சேபணை இல்லை. ஆனால் எவனையும் கொல்லுகிற வேஷம் நமக்கு ஒத்து வராது. பயங்கர மான வேஷத்தில் நடிக்க நான் பயப்படவில்லை. சம்ஹார

மூர்த்தியாகத் தோன்றுவதற்கு நான் தயார். ஆனால் நம்முடைய கையால் இனிமேல் ஒரு காகம் மடியக் கூடாது! அது நிச்சயம்!'' என்றார் வேங்கடசாமி, ஒரே தீர்மானமாக!

## 5

தீபாவளி விசேஷ நாடகம் விளம்பரத்துக்கு இணங்க நடைபெற்றது என்று சொன்னால் நீங்கள் நம்பமாட்டீர்கள். மெய்யாகவே தீபாவளியன்று வேங்கடசாமியின் ''ஸ்பெஷல் புரட்சி'', எவ்வித விக்கினமும், சேதமும் இன்றி, நடைபெற்றது! ஆனால் ஒரே ஒரு மாறுதல்; ஒரு சிறு புரட்சி; ''ஹிரண்யன் வதம்'' என்ற நாடகத்திற்குப் பதிலாக, 'நரகாசுர வதம்' என்ற நாடகம் நடைபெற்றது! வேங்கடசாமி மேடையிலே கிருஷ்ணபரமாத்மாவாகத் தோன்றினார்! இதற்கு முழுக்க முழுக்கக் காரணம் வேங்கடசாமியும், அவருடைய ''கொல்லா'' விரதமும்தான். முக்கியமான கட்டத்தில் கிருஷ்ண பரமாத்மா அப்படியே மயக்கம் போட்டு விழுந்து விட்டார்! பக்கத்திலே நின்ற சத்தியபாமை அந்த வினாடியே வில்லை ஏந்தி, நரகாசுர வதத்தை அற்புதமாகச் செய்து முடித்தாள். வெற்றி யாருக்கு? சந்தேகமில்லாமல், ஹாஸ்ய நடிகர் வேங்கடசாமிக்குத்தான்!

# சிலம்பக் கூடம்

புளியந்தோப்பு சீனித் தேவர் என்று சொன்னால், 'அகில உலக சிலம்ப உஸ்தாத்' என்று அர்த்தம்! வாழ்க்கையிலோ என்றால், அவர் அந்த ஊர் கிராம முன்சீபிடம் ஒரு வெட்டியான்!

சீனித் தேவர் சாதாரணமாகப் பெரிய மனிதர்களைக் கண்டால் மேல்-துண்டை எடுத்து அரையிலே கட்டி நின்றுதான் பேசுவார். அவ்வளவு அடக்க ஒடுக்கம். ஆனால் சிலம்பக் கூடத்துக்குள்ளே இறங்கிவிட்டால், அவர் உஸ்தாத். அவருக்கு 'சலாம்' வரிசை வாங்கிக் கொண்டுதான் சீடர்கள் எல்லாரும் வட்டத்துக்குள் இறங்க வேண்டும். அதிகம் சொல்வானேன்? அந்தக் கிராம முன்சீபே வந்து சிலம்பம் படிப்பதானாலுங்கூட, சீனித்தேவருக்குத் தேங்காய் தட்டி, 'சலாம் வரிசை'யும் வாங்கித்தான் ஆகவேண்டும்!

சீனித்தேவருக்கு நிகராக சிலம்பம் ஆடுபவர் அந்த வட்டாரத்திலேயே யாரும் கிடையாது. கம்பு வீச்சில் அவர் வேங்கைப் புலி! 'கோப்ட்டாக் கத்தி'யை எடுத்துக்கொண்டு வீச ஆரம்பித்தார் என்றால், பார்க்கிறவர்களுக்கு ஈரல் பதறும். ஆனால் பார்த்துக்கொண்டே இருக்கவேண்டும் என்று ஆசை தோன்றும்! கூட்டங்களுக்குள் சுருளியைச் சுழற்றிக்கொண்டு சீனித்தேவர் பாயும்போது, 'நடன பலாட்டிய நரவீர சண்டியர்'களும் கதிகலங்கிப் போவார்கள்!

வித்தையில் தேர்ந்த திறமைசாலிகளில் பலர் சாதாரணமாகத் தங்கள் வித்தை முழுவதையும் மகிழ்ச்சியோடு வழங்கி, சிஷ்ய சந்ததியை ஸ்தாபிப்பதில்லை. ஆனால், சீனித்தேவர் அப்படியில்லை. தமக்குப் பின்னால் தம்முடைய பெயரைச் சிலம்பக் கம்பிலே சுழற்றி வானத்தில் வீசி விளையாடக்கூடிய இரண்டு சீடர்களை அக்கறையோடு பயிற்றியிருந்தார். அவர்களிடம் அவருக்கு அபாரமான நம்பிக்கை.

சங்குத்தேவனும், சந்தனத் தேவனும் சரியான இளங் காளைகள். எத்தனையோ ஆண்டுகள், எத்தனையோ வாலிபர்களை ஆராய்ந்து, எத்தனையோ பேரைக் கழித்து இவர்களைத் தேர்ந்தெடுத்து ஜோடிகளாக இணைத்திருக்கிறார், சீனி. அசைப்பிலே பார்த்தால் யார் சங்கு, யார் சந்தனம் என்று இனங்கண்டு சொல்லிவிட முடியாது. ஒரே உயரம், ஒரே மாதிரி ஒடிசலான தேகம், ஒரே நடை, உருவிவிட்ட சாட்டை மாதிரி ஒரே வேகம் இருவருக்கும். முகங்கூட அநேகமாக ஒன்றுபோல் இருக்கும். ஆட்டத்தில் இருவரும் சரி நிகர் சமானம்; ஒருவனை ஒருவன் வென்றான் என்றோ, ஒருவனுக்கு ஒருவன் பம்மினான் என்றோ கிடையாது!

ஐப்பசி கார்த்திகை மாதங்களில் மாலை நேரத்தில் தாமிரவருணிக் கரையில், புளியந்தோப்பில் நின்று பார்த்தால் பொதிகை மலைக்கு மேலே மின்னல்கள் துவளுவது தெரியும். சங்குத் தேவனும் சந்தனத்தேவனும் சிலம்பக் கூடத்துக்குள் இறங்கி, ஆசானிடம் சலாம் வாங்கும் முறையைப் பார்க்கும்போது, அந்த மின்னல்களில் இரண்டு பொதிகை மலையிலிருந்து கீழே இறங்கி வந்து சீனித்தேவருக்கு முன்னால் வணங்கித் துவளுவது போல் இருக்கும்!

"எல்லாச் சிலம்பப் பள்ளிக்கூடத்திலுந்தான் ஜோடிகள் என்று இருக்கும். ஆனாலும் இந்த மாதிரி ஜோடி எப்படித்தான் அமைந்ததோ!" என்று எல்லாரும் அதிசயப்பட்டார்கள்.

எனவேதான், மயிலம்மையின் நிலைமை அவ்வளவு கஷ்டமாகப் போய்விட்டது!

## 2

மயிலம்மை சீனித்தேவருக்கு ஒரே மகள். மகள் என்ன—மகள், மகன், மக்கள் எல்லாம் அவளேதான். சிவப்பும் கருப்பும் ஒன்று பேசிக் கலந்து உருவம் எடுத்தது போல அவளுடைய நிறம்-பொது நிறம். அந்தக் கிராமத்துப் பெண்களிலேயே அவள் ஒரு தனியான கவர்ச்சி! தாயில்லாப் பெண்ணானதால், அப்பாவைப் பெற்ற 'ஆச்சி'யிடம் அவளுக்கு ஏகப்பட்ட செல்லம். அந்தச் செல்லத்திலே வளர்ந்ததால், நல்ல சூரிய வெளிச்சத்தில் வளர்ந்த பூச்செடி மாதிரி அவள் வனப்பாக இருந்தாள். முகத்தில் ஒரு பிரகாசம்; கண்கள் எப்பொழுதும் சிலம்பம் ஆடிக்கொண்டே யிருக்கும். நேர் வகிடுக் கொண்டையும், நெற்றியிலே துலங்குகிற நேர்த்தியான குங்குமப் பொட்டும், வீராதி வீரன் சிலம்பச் சூரனையும் சலாம் வரிசை வாங்க வைத்துவிடும்!

மயிலம்மை அடிக்கடி தகப்பனாரோடு சிலம்பக் கூடத்துக்கு வருவதுண்டு. அவள் வந்துவிட்டால் ஆட்டத்தில் களை கட்டும். சீடப் பிள்ளைகள் தங்கள் குருநாதனுடைய குமாரிக்கு முன்பாகத் தாங்கள் கற்ற வித்தையையெல்லாம் ஸ்தாபிதம் செய்வார்கள். சிலம்பக் கூடத்தின் அந்த ஜோடிகள் இருக்கிறார்களே, அவர்களுக்கோ சொல்லவே வேண்டாம்!

மயிலம்மை சம்பந்தப்பட்ட மட்டில், சங்குத்தேவன், சந்தனத்தேவன் இருவருடைய ஆட்டமுமே அவளுக்கு வியப்பூட்டியது. சில சமயங்களில் இமை கொட்டாமல் அவள் பார்த்துக்கொண்டே யிருப்பதைக் கவனித்தால், இந்த இருவரில் யாரை அதிகமாக வியப்பது என்று அவளுடைய கண்கள் அங்கும் இங்கும் தடுமாறுவது போல் தெரியும்!

இந்தத் தடுமாற்றம் பல நாளாக நீடித்தது. ஒரு நாள்—

ஒரு நாள் மயிலம்மை சிலம்பக் கூடத்துக்கு வருவது நின்றது. அவளுக்கு மஞ்சள் நீர் ஆட்டியதிலிருந்து, அவள்—பெரிய மனுஷி—வெளியே வரக்கூடாது என்று ஆகிவிட்டது. ஆச்சிதான் அவளுக்குத் துணை.

''அல்லி யரசாணி மாலை''யும் ''புரந்தரன் களவு மாலை''யும், ''பஞ்சபாண்டவர் வனவாசமும்'' அவளுக்குப் பொழுதுபோக்கு. எப்பொழுதாவது சங்குவும் சந்தனமும் வாத்தியாரைத் தேடி வீட்டுக்கு வருவார்கள்; மற்றப்படி சிலம்பத்துக்கும் மயிலம்மைக்கும் இப்பொழுது எத்தனையோ மைல்கள்!

# 3

மயிலம்மை மெய்யாகவே மிகவும் அவதிப்பட்டாள். ஆச்சிக்குத் தெரியாத ரகசியம் ஏது? அவளுக்கும் தன்னுடைய பேத்தியை இந்த இரண்டு வாலிபப் பிள்ளைகளில் ஒருவனுக்குக் கல்யாணம் முடிப்பதில் இஷ்டந்தான். ஆனால் இருவரில் யாரைத் தேர்ந்தெடுப்பது?

சீனித் தேவருக்கோ என்றால், இரண்டு பேரும் இரண்டு கண்கள் மாதிரி.

நிலைமை இப்படி இக்கட்டாக இருக்கும்போதுதான், உலகம்மன் கோவிலில் தசரா வந்தது. தசரா என்ருல், சிலம்பப் பள்ளிக்கூடத்துக்கு வருஷத்துக்கு ஒரு நாள்! அம்மன் சப்பரம் செல்வதற்கு அடுத்தபடியாக, அந்த வட்டாரங்களில் உள்ள சிலம்பப் பள்ளிக்கூடத்துச் சீடர்கள் எல்லாரும் அணி வகுத்துச் செல்லும் திருவிழா அது! வீதி முனைகளில் நின்று ஒரு வருஷத்துக்குக் காணும் படியாக ஆடுவார்கள்!

வாண வேடிக்கைகளும், புலி வேஷங்களும், சாமி யாட்டங்களும் ஒரே அமர்க்களமாயிருந்தன. பனியன் துணியினுல் செய்த நீண்ட கால் அங்கிகளை அணிந்த சிலம்ப வீரர்கள், பத்தி பத்தியாகச் சென்ருர்கள். மேலே பனியனுல் தைத்த முழுக்கைச் சட்டை உடம்பை இறுக்கிக்கொண்டு நெளிந்தது. அரையிலே பச்சை வெல்வெட் துணியினுல் 'ஜட்டி'. கழுத்தைச் சுற்றி ரோஜா நிறத்தில் முக்கோணவடிவத்தில் முடி போட்டுத் தொங்கும் சவுக்கம். கையில் உயரம் உயரமான சிலம்பக் கம்புகள்; கோப்ட்டாக் கத்திகள். அந்தக் கத்திகளிலே சொருகிய பளபளப்பான கேடயங்கள். அங்கங்கே சுருளி கள், மான் கொம்புகள். அந்தக் காட்சி ஏதோ பெரிய படை புறப்பட்டதுபோலத் தெரு வீதிகளில் அணி அணி யாக வந்தது.

சீனித் தேவருடைய வீட்டை அடைந்ததும் கூட்டத் தில் ஒரு பரபரப்பு உண்டாயிற்று.

வாத்தியார் சுருளியைக் கையிலே பிடித்துக்கொண்டு கூட்டத்துக்குள் இறங்கினுர். அப்படியே வட்டமாக ஜனத்திரள் ஒதுங்கி வளையமிட்டு நின்றது.

வாணங்கள் வானத்தில் சீறி வெடித்து வர்ணங்களை உதிர்த்தன. தூரத்தில் மேளமும் பாண்ட் வாத்யமும்

ஒரு கலக்குக் கலக்கிக் கொண்டிருந்தன. தீவட்டிகள், காஸ் லைட்டுகள், மானிடத் தோளில் ஏறி நின்று எரியும் பெட்ரோமாக்ஸ் விளக்குகள் எல்லாம் அங்கங்கே இடம் போட்டு நின்று ஒளி வீசின. சிவப்பும், பச்சையுமாக மத்தாப்புகள்—சுற்றுப்புறங்களுக்கும், ஜனத்திரளுக்கும் வர்ணம் பூசின. வளையமிட்டு நின்ற கூட்டத்தின் மத்தியில் அந்த விசாலமான வட்டத்துக்குள் ஜோடிகள் இறங்கினார்கள்!

மூடி விழிக்கும் நேரத்தில் இளங்காளைகள் இருவரும், ஆசானுக்கு முன்பு துள்ளி வந்து சலாம் வாங்கினார்கள். அடுத்த கணம் வலது காலையும் இடது காலையும் மாற்றி மாற்றிப் பாவி எட்டத்திலிருந்து கைக்கம்பை நீட்டிய வண்ணம், 'பாவலா' போட்டு அருகிலே வந்தார்கள். குச்சிகளை மேலே உயர்த்தி ஒரு 'டக்'! பிறகு கீழே தாழ்த்தி ஒரு 'டக்'! பிறகு மறுபடியும் மேலே! இப்படியாக 'டக் டக் டிக்!'—ஆட்டம் வெகு ரஸமாகத் 'தட் தட்' என்று எவ்வியது. இடையிடையே இரண்டு பேரும் சீனித் தேவர் வீட்டு ஜன்னலையும் பார்த்துக் கொண்டார்கள்! ஒவ்வொரு பார்வைக்கும் உற்சாகம் ஒரு படி மேலே சென்றது!

வாத்தியார் திகைத்தார். வெகு நேரம் ஆகியும் சீடர்கள் இருவரும் ஆடிக்கொண்டே யிருந்தார்கள். இருவருடைய முகத்திலும், களைப்புக்குப் பதிலாக ஒரு புதிய வேகம் அரும்பியிருந்தது. பார்த்துக்கொண்டிருந்த ஜனங்களே நினைத்தார்கள்: "இன்றுதான் ஜோடிகளுக்குள் ஒரு போட்டி தெரிகிறது" என்று. அதைக் கண்டு அந்த ஜனங்களுக்கெல்லாம் கொண்டாட்டம்; ஆனால் மயிலம்மைக்கோ? சில சமயம் ஜன்னல்-கம்பிகளைப் பெயர்த்துக்கொண்டு வெளியே வந்து, "நீங்கள்

இரண்டு பேரும் சமம். வெற்றி–தோல்வி என்பது எவ் வளவு நேரமானாலும் கிடையாது!'' என்று சொல்லிவிட லாமா எனத் தோன்றும். நேரம் ஆக ஆக இந்த ஆத் திரம் அதிகரித்தது!

உலகம்மன் சப்பரம் இதற்குள் வீதியைத் தாண்டி வெகு தூரம் போய்விட்டது. சீனித் தேவருக்கு வேறு வழி புலப்படவில்லை. வட்டத்துக்குள்ளே சாடினார். இரண்டு பேரையும் முதுகைத் தட்டி 'சபாஷ்' கொடுத்து விட்டு, கூட்டத்தை 'நகரலாம்' என்று கை கூப்பினார்.

ஜோடிகளின் சிலம்ப ஆட்டம் நின்றது. ஆனால் அந்த இரண்டு மனங்களுக்குள்ளும் மிகப் பெரிய சிலம்ப ஆட்டம் அப்பொழுதே ஆரம்பமாகிவிட்டது!

## 4

சீனித் தேவர் பெரிய பெரிய புதிர்களுக்கெல்லாம் விடை காணுவது, தம்முடைய கிராம முன்சீபு ஐயா விடம் வந்துதான். எனவே, தம்முடைய மகளின் கல் யாணப் பிரச்னையையும் அவருடைய சந்நிதிக்கே கொண்டுவந்தார். கிராம முன்சீபு சொன்னார், ''இந்த இரண்டு பேரில் யார் சிலம்பம் ஆடி வெற்றி பெறுகிறானோ அவனுக்கு மயிலம்மையைக் கொடுக்கலாம்'' என்று.

சிக்கலுக்கு இப்பொழுது இன்னும் பலமான முடிப்பு விழுந்துவிட்டது. உலகம்மன் கோவிலை அடுத்த 'லாலர் தோப்பில்' ஜோடிகள் இருவரும் மயிலம்மைக்காகச் சிலம்பப் போட்டியிலே இறங்குவது என்று நாள் குறித்து விட்டார்கள்! வென்றால் மயிலம்மையோடு வாழ்வு, வெல்லாவிட்டால் மயிலம்மைக்காகச் சாவு என்ற தீர் மானத்தில் சங்குத் தேவனும், சந்தனத் தேவனும் முனைந் தார்கள்!

போட்டி நாள் நெருங்க நெருங்க, சீனித் தேவருக்கு மனத்தைப் புளிக்கரைக்க ஆரம்பித்துவிட்டது! காரணம் தம்முடைய சீடர்கள் ஒருவனை ஒருவன் காலை வாங்குவது, கையை வாங்குவது என்று பேசிக் கொள்வதாக அவர் காதில் விழுந்தது. மயிலம்மையோ, இந்த விவகாரத்தில் அனுவசியமாக கிராம முன்சீபு ஐயா நுழைந்து போட்டி யோசனையினல் குட்டை குழப்பி விட்டார் என்று மனம் வருந்தினுள். தனக்குக் கல்யாணமே வேண்டாம் என்று கூடச் சொல்லி விடலாமா எனப் பல தடவைகள் அவள் நினைத்தாள்!

அந்தி வேளையில் ஆறு மணியிருக்கும். பூக்காரி வந்தாள். 'கேட்டையா சங்கதி' என்று மயிலம்மையிடம் வந்து பேச ஆரம்பித்தாள். அவள் சொன்ன விவரம் மயிலம்மையின் மனத்தைத் திகிலடையச் செய்தது.

தெருவோடு போய்க் கொண்டிருந்தபோது பூக்காரியின் காதில் சங்குத் தேவன் தன் சகாவுடன் பேசிய வார்த்தை நன்ருகக் கேட்டதாம். "சந்தனத் தேவனைக் கெலிப்பது. இல்லையென்ருல் இந்த உலகம்மன் சத்தியமா இந்தப் பயலுடைய காலை முறித்து முடமாக்குவது" என்று அவன் சபதம் கூறினுனும்!

'தன்னிடம் சங்குத் தேவனுக்குள்ள அளவு கடந்த பிரியம் அல்லவா இப்படிச் சபதம் போடச் செய்கிறது' என்று முதலில் மயிலம்மை நினைத்தாள். ஆனல் பாவம், சந்தனத்தேவனுக்குக் கால் முறிவதை எண்ணிப் பார்க்கவே அவளுக்குத் திகிலாக இருந்தது. அப்பா வந்ததும் அவரிடம் விஷயத்தைச் சொன்னுள். அவருக்கும் உள்ளூரக் கவலையிருந்தாலும் அதைக் காட்டிக் கொள்ளாமல், "சந்தனத் தேவன் அத்தனைக்கு விடுவானு! சம ஜோடியல்லவா? சங்கு வந்து காலை முறிக்கும்வரை இவ

னுடைய கை புளியங்காய் பறிக்கவா போயிருக்கும்!'' என்று சொல்லிப் பேச்சை முடித்தார்.

அந்த நேரத்தில் ''வாத்தியாரையா'' என்று சத்தம் கேட்டது. திரும்பிப் பார்த்தார். சந்தனம் நின்று கொண்டிருந்தான்.

''என்னடா நாளை ஆட்டத்திலே நம்ப வள முறைகளை யெல்லாம் மீறி, சங்குத்தேவன் காலை முறிக்கப் போறியாக்கும்!'' என்ருர் வாத்தியார்.

''இல்லை, அப்படிச் சபதம் செய்திருப்பது சங்குதான். நானில்லை'' என்ருன் சந்தனம்.

''உன்னுடைய தீர்மானம் என்னவாம்?''

''இந்தப் போட்டியே வேண்டாங்கிறதுதான்!''

சீனித்தேவர் இந்த வார்த்தையை எதிர்பார்க்கவில்லை.

''என்னடா சீடப் பிள்ளை, பயந்துட்டியா?'' என்று சிரித்துக்கொண்டே கேட்டார். மனத்துக்குள் அந்த மாதிரிப் போட்டியில்லாமற் போய்விட்டால் அவருக்கும் இப்பொழுது திருப்திதான்!

''பயத்திலே சொல்லலை. போட்டின்னு வந்துட்டா, குருநாதன் கிருபையிலே ஒரு கை பார்த்துத்தான் விடுவேன். அது ஒங்களுக்கே தெரியும். ஆனு...'' என்று இழுத்தான் சந்தனம்.

''ஆனு என்னடா?'' என்று கேட்டார் சீனித்தேவர்.

''என் காலை அவன் முறிச்சா அவன் காலை நான் முறிக்காம விடமாட்டேன்! முடிவு அதுதான். ஆனு கடைசியிலே மயிலம்மை இந்த இரண்டு முடவனிலே ஒரு

முடவனோடுதானே வாழணும்! அதுதான் மனசுக்குச் சங்கடமாயிருக்கு—'' என்றான் சந்தனம்.

சீனித்தேவர் அசைந்துவிட்டார். சந்தனத்தின் வார்த்தைகள், எதிர்காலத்தின் மெய்யான ஒரு சூழ் நிலையை அவர் கண் முன்பு சித்திரித்தன!

''என்னடா பெரிய குழப்பமாப் போச்சு. என்னதான் இதுக்கு வழி?'' என்றார் அவர். அந்த வார்த்தைகளில் ஒரு சலிப்புத் தெறித்தது.

சந்தனம் முடிவாகச் சொன்னான்: ''நல்ல நாள் பார்த்து சங்குத்தேவனுக்கும் மயிலம்மைக்கும் கல்யாணம் முடியுங்க. எப்படியும் அவ நல்லாயிருக்கணும்.''

## 5

சிலம்பப் போட்டி நடைபெறவில்லை. என்றாலும் மயிலம்மைக்குத் திருமணம் நடந்தேறியது! ஆனால் சங்குத்தேவனுக்குப் பதிலாக சந்தனத்தேவன் அவளை மணந்தான்!

இரண்டு பேரில் யாரைத் தேர்ந்தெடுப்பது என்று திண்டாடிக்கொண்டிருந்த மயிலம்மை வெகு எளிதில் அந்த மகத்தான தீர்மானத்துக்கு வந்து விட்டாள். அன்று சாயந்திரம் சந்தனத்தேவன் தன் அப்பாவிடம் வந்து சொன்ன வார்த்தைகள் மயிலம்மையின் மனத்தில் அவ்வளவு பெரிய மாறுதலைச் செய்துவிட்டன. உண்மை யில், மயிலம்மையின் நலத்தை எண்ணி எதிரிக்கே விட்டுக் கொடுக்க நினைத்தானே சந்தனம், அந்த நினைப்பு அவளைக் கண்கலங்க வைத்துவிட்டது. தன்னிடம் எவ் வளவு அன்பு சந்தனத்துக்கு இருந்தால் அவன் அப்படிச் சொல்லியிருப்பான் என்று யோசித்துப் பார்த்தாள்.

'அல்லி கதை', 'புரந்தரன் கதை' இவற்றில் வருகிற ஆடவர்கள் எல்லாம் சுயநலக்காரர்களாகவே அவளுக்குப் பட்டது. ஒரு பெண்ணுக்காகத் தன்னுடைய விரோதியை வீழ்த்துகிற சுயநலச் சூரர்கள்—சங்குத்தேவர்களை— அவளுக்குத் தெரியும். ஆனல் உண்மையான அன்பு காரணமாக எதிரிக்கே விட்டுக் கொடுக்கிற சந்தனத் தேவனை முதன் முதலாக இன்றுதான் பார்த்திருக்கிருள்!

மணமக்களை ஆசீர்வாதம் செய்த கிராம முன்சீப் சிவசங்கரம் பிள்ளை, சிலம்ப வாத்தியார் சீனித்தேவருக்கே ஆசாணுக நின்று விஷயத்தை விளக்க ஆரம்பித்தார்: "நீர் சிலம்பம் ஆடுபவர். நான் சிலம்பம் பார்ப்பவன். நம் கண்ணுக்கு சந்தனமும் சங்கும் சரி நிகர் சமானந் தான். ஆனல், மயிலம்மை எவ்வளவு எளிதில் அவர்களை இனங் கண்டுபிடித்து விட்டாள் பாரும்! மன உலகம் என்பது தனி! அது வேறு வகையான ஒரு சிலம்பக் கூடம்!"

# ஜீவ நதி

பாரத நாட்டின் வடக்கு எல்லையில், நாட்டுக்கு அரணாக அமைந்து மக்களைக் காத்து நின்ற பனிச் சிகரங்களின் கற்பனை கடந்த உச்சியிலே, நீலகண்ட மகேச்வரன் யோகத்தில் ஆழ்ந்திருந்தான்.

மாதங்கள் பறந்தன. வருஷங்கள் ஓடின. பருவ காலங்கள் சுழன்றன. அந்தப் பனிச்சிகரங்களின் கோடியிலே நீலகண்ட மகேச்வரன் நிஷ்டை கலையாமல் மோனத் தவத்தில் மூழ்கி இருந்தான்.

மேகங்கள் ஈச்வரனுடைய கேசத்தில் வட்டமிட்டன. சூரியன் அந்த மேகங்களில் உதித்தான்; அஸ்தமித்தான். சந்திரன் அந்த மேகங்களிலே ஊர்ந்தான்; தேய்ந்தான். ஆனால் மகேச்வரன் அப்படியே அசையாமல் யோகத்திலே, அந்த அற்புதமான நிஷ்டையிலே லயித்து, உலகங்களை—தான் படைத்த அண்டபிண்ட சராசரங்களையெல்லாம்—மறந்து மகத்தான தவத்தில் ஒன்றி இருந்தான்.

பனி பெய்தது. வெயில் எரித்தது. மழை பொழிந்தது. மின்னல்கள் மின்னி இடிகள் இடித்தன. அந்தத் தவம் கலையவில்லை. அந்த மோனம் சிதையவில்லை.

எத்தனையோ வருஷங்கள் இப்படியே இறைவனுடைய நிஷ்டையில் கழிந்தன.

ஆர்ய வர்த்தத்தில் ஒரு மாறுதல் ஏற்பட்டது. இதுவரை கண்டிராத கோடை. மனிதர்கள் இதுவரை அனுபவித்திராத வெப்பம். மரங்கள் பட்டு வீழ்ந்தன. மட்டைகள் எல்லாம் வெடித்து உரிந்தன. ஜீவராசிகள் அனைத்தும் உஷ்ணத்தைத் தாங்க முடியாமல் வெம்பின.

நீர் நிலைகளிலே பூமி வெடித்து பூதாகாரமாகக் காட்சி தந்தது. எங்கும் வெப்பம். நெருப்பு. உலகமே ஒரு பாலைவனமாக அனல் விட்டது. 'தண்ணீர் தண்ணீர்' என்று மக்கள் தவித்தார்கள்!

ஹிமாசலத்தின் பனிக்குன்றுகளில் மகேச்வரன் மோனத் தவத்தில் ஆழ்ந்திருந்தான். 'இது என்ன தெய்வ சோதனை' என்று தெரியாமல் இயற்கை அன்னை கண்ணீர் வடிக்கவுங்கூடத் தண்ணீர் இன்றி வறண்டு நின்றாள்.

ஹேமராஜன்—ஆரிய வர்த்தத்தின் வேந்தன்—என்ன செய்வதென்று புரியாமல் திகைத்தான். மந்திரிகளைக் கூப்பிட்டு ஆலோசனை செய்தான். புத்தி சாதுரியத்தில் இணையற்ற தனது ஹேமராணியிடங்கூட யோசனை கேட்டான். ஒருவருக்கும் ஒன்றும் தோன்றவில்லை. அந்த வெப்பத்தில் எல்லாருடைய மூளையுமே வறண்டு கிடந்தது.

"ஏ வானமே, காற்றே, நெருப்பே, புனலே, புவியே நீங்களாவது சொல்லுங்கள். ஆர்ய வர்த்தத்திலே மக்கள் தவிக்கிறார்கள்" என்று மன்னன் பஞ்ச பூதங்களை யும் இரங்கி வேண்டினான். அவனுடைய குரலில்,

வறண்டு தவிக்கும் மக்கள் அனைவருடைய தாபமும் ஒருங்கே கேட்டது. அப்பொழுது மேகங்கள் அசைந்தன. வானத்தில், ஒரு அசரீரி உண்டாயிற்று.

"இந்தப் பனிமலை போன்று புனிதமானவளும், இந்தப் பனிக்கட்டி போன்று வெண்மையானவளுமான ஒரு குமரி, தன் பந்தங்களை யெல்லாம் களைந்து, தியாக சிந்தனையுடன் மலையிலிருந்து கீழே இறங்குவாள். அப்பொழுது மழை பெய்யும்; பூமி செழிக்கும்; மக்கள் இன்பம் அடைவார்கள்!"

ஹேமராஜன் கூர்ந்து கேட்டான். அந்தக் குரல் வானத்திலிருந்துதான் வந்தது!

## 2

ஹிமாசலத்தின் உச்சியில், மோனத் தவம் இருந்த பரமேச்வரனுடைய கேசத்தில், பனிகள் விழுந்து உறைந்து குகை குகையாக அமைந்து நின்ற பனிச் சரிவு களில், சூரியனுடைய கதிர்கள் பாய்ந்து விளையாடுவதைப் பார்த்துச் சிரித்துக் கொண்டு நின்றாள் குமாரி கங்கா. உதய சூரியனுடைய கிரணம் அந்தப் பனிக் குகைக்குள்ளே ஓடி ஏழு வர்ணங்களுடன் பிரதிபலித்து மீள்வதைக் கண்டு, தன்னுடைய பனிக்கட்டி போன்ற பற்களிலிருந்து ஒளி வீச அவள் நகைத்தாள். தண்மையான அந்தச் சிரிப்பொலி பனிக் குகையிலே எதிரொலித்து அந்தப் பனிப் பிரதேசம் எங்கும் ஒரு கலகலப்பைக் கொடுத்தது.

ஹேமராஜன் அசரீரி சொன்ன தியாக கன்னியைத் தேடிக்கொண்டே அந்தப் பனிக் குன்றுகளில் அலைந் தான். அவனுடைய உள்ளத்தின் அழைப்புக்கு இங்கிதம்

தருவதுபோல, எங்கிருந்தோ ஒரு குமரியின் சிரிப்பொலி வந்தது! ஹேமராஜனுக்கு அப்பொழுதுதான் மனத்தில் ஒரு நம்பிக்கை உண்டாயிற்று. 'மகேச்வரனுடைய கேசத்தில் உறைந்து கிடந்த பனிக்குகைகளில் ஒரு கன்னி ஒளிந்து விளையாடுகிருள்' என்று கண்டு கொண்டான்!

"குமாரி, என்ன விளையாட்டு இது. கால்கள் சோர உன்னை எங்கெல்லாம் தேடுகிறேன்."

பனித் திட்டுக்கள் சிதறிச் சரியும்படியாக, ஒரு சிரிப்புச் சிரித்துக்கொண்டே அவள் ஓடி வந்தாள். திவலை திவலையாக அவளுடைய கூந்தலிலிருந்து பனி முத்துக்கள் உதிர்ந்தன.

"பனி அழகி, சற்று நேரத்துக்கு முன் ஒலித்த அசரீரி உனக்குத் தெரியுமா?" என்று கேட்டான் ஹேமராஜன்.

பிரிந்து கிடந்த தனது அடர்த்தியான கூந்தலை அலட்சியமாக எடுத்துச் செருகிக் கொண்டே, "எனக்கு அசரீரியில் நம்பிக்கை கிடையாது!" என்று சொன்னுள் அந்தப் பெண். அவளுடைய பிராயத்தையும் மீறின விம்மிதம் அந்த வார்த்தைகளில் தொனித்தது.

"அம்மா, பனிமலை போன்று பரிசுத்தமானவளும், பனிக்கட்டி போன்று வெண்மையானவளுமான ஒரு குமாரி—"

"அதற்குமேல் சொல்லாதீர்கள். நான் இந்தப் பனிக்குகையை விட்டு நகரமாட்டேன். இங்கே வந்து பாருங்கள். என்ன குளிர்ச்சி! செங்கதிர் குகைக்குள் பாய்ந்து விளையாடும்போது எத்தனை எத்தனை வர்ணம்!

அவள், விடாமல் வர்ணித்துக்கொண்டே போனாள். ஹேமராஜன் ஏதேதோ சொல்லிக் கெஞ்சினான். குமரியின் மனம் உறைந்த பனிக்கட்டிபோல இறுகிக் கிடந்தது.

திடீர் என்று—என்ன ஆச்சரியம்—ஒரு குழந்தை அழும் குரல் கேட்டது. ஹேமராணி கையில் எதையோ எடுத்துக்கொண்டு அங்கு வந்தாள்.

"என்ன! என்ன இது?" என்று கேட்டான் வேந்தன்

அவனுக்கு உடல் எல்லாம் பதறியது!

"குழந்தைதான், சற்று நேரத்துக்கு முன் அழுதது இப்பொழுது அழக்கூட ஜீவன் இல்லை—அத்தனை வறட்சி தாகம் தாங்காமல், கவனிப்பாரற்றுக் காய்ந்து கிடக்கிறது!"

பனிக்குமரி தன் நெற்றியைக் கைகளால் துடைத்து விட்டுக்கொண்டு, திரும்பிப் பார்த்தாள்.

"குழந்தையா! பாலைமரக் கட்டைபோல உரிந்து கிடக்கிறதே!"

ஹேமராணி அந்தக் குழந்தையைக் குமாரியின் கையிலே கொடுத்தாள். பனிக்கன்னி அன்போடு அதை எடுத்து அணைத்தாள். அந்த நேரத்தில் அவளுடைய கூந்தற் செறிவிலிருந்து ஒரு பனிக்கட்டி நழுவி வந்து வறண்டுபோன அந்தப் 'பாலைமரக் கட்டை'யின் நாவிலே விழுந்தது. என்ன விந்தை! கட்டை கண்ணைத் திறந்தது. உடலை நெளித்தது. மறுகணம் 'வீல்' என்று அழ ஆரம் ... இப்பொழுது 'ஜீவன்'